श्रीरामचन्द्रपरब्रह्मणे नमः

# ।। श्रीरामकर्णामृतम् ।।

# ஸ்ரீராமகர்ணாம்ருதம்



ஸ்ரீ ராம பக்த ஜன ஸமாஜ்

ஸ்ரீ ராமநவமி 2009 வெளியீடு

ஸ்ரீ பகவந் நாம போதேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் அருளிய

# ஸ்ரீராமகர்ணாம்ருதம்



ஸ்ரீராமநவமி உற்சவம் - 2009ல் வெளியிடப்பட்டது.

# ஸ்ரீ பகவந் நாம போதேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்

ஜகத்குரு ஆதிசங்கர பகவத் பாதர் ஸ்தாபித்த காஞ்சி காமகோடி சங்கர மடத்தின் 59ஆம் பீடாதிபதியாகத் திகழ்ந்த பரமாசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீ பகவந்நாம போதேந்திர சரஸ்வதி (17ஆம் நூற்றாண்டு). இவர்தான் முதலில் ஸ்ரீராம நாம சங்கீர்த்தன மகிமையை கலியுகத்தின் துன்பம்-துயரம்-துக்கம் விலக பக்த கோடிகளுக்கு உபதேசித்து அருளினார். அவர் உருவாக்கியது தான் ஸ்ரீராம சித்தாந்தம் எனும் ஸ்ரீ பாகவத தர்மம். இது அன்று முதல் ஆஸ்திக சமுதாயத்தில் பிரபலமாகி வருகிறது. ஸ்ரீராம நாம சங்கீர்த்தனம் பக்த ஜனங்களுக்கு எளிய, இனிய தெய்வ ஆராதனை.



ஸ்ரீ பாகவத தர்மம் சனாதன வைதிக தர்மத்திற்கு ஏற்ற உத்தமமான பக்தி நெறி. அத்வைத சித்தாந்தத்திற்கும் பஞ்சாயதன பூஜா விதிக்கும் அனுகூலமான வழிபாடு என போதித்தார். பிறகு உதித்த பக்த தியாகராஜர் போன்றவர்களுக்கும் தர்ம குருவாகத் திகழ்ந்தவர்.

காஞ்சிபுரத்தில் மண்டல மிச்ரர் அந்த காலத்தில் வாழ்ந்துவந்த வைதிக சிரேஷ்டர், ஆந்திர பிராமணர் கேசவ பாண்டுரங்க யோகி. இவர் மனைவி சுகுணா தேவி. இந்த வைதிக தம்பதியருக்கு ஆதி சங்கரரின் அநுக்ரஹத்தால் அவதரித்தவர் போதேந்திரர் இயற்பெயர் புருஷோத்தமன். இளம் வயது முதலே வாநுக்ரஹம் புலப்பட வளர்ந்தவர்.

கேசவ பாண்டுரங்க யோகி காஞ்சி சங்கரமடத்தில் கைங்கர்யம் செய்து வந்தார். அப்போது பீடாதிபதியாக விளங்கியவர் ஸ்ரீ போதேந்திர விசுவாதிகேந்திர சரஸ்வதி சுவாமிகள். தந்தையுடன் சிறுவன் புருஷோத்தமனும் காஞ்சி சங்கரமடத்திற்கு வந்து, அங்கு ஆசாரிய சுவாமிகளுக்கு எதிரே அமந்திருப்பான். அவருடைய

உபதேசங்களைக் கேட்டு ஞானம் பெறுவான். பக்கத்திலிருந்து பாடசாலையில் சேர்ந்து வேதம், சாஸ்திரம், தோத்திரம், வேதாந்தம் எல்லாம் பயின்று தேர்ச்சி பெற்றான். பதினாறு வயது நிரம்பியபோது வேத-வேதாந்த, சாஸ்திர வித்தைகள் தேர்ச்சி பெற்று மகாவித்துவானாக, மகாஞானியாக புருஷோத்தமன் திகழ்ந்தான். சங்கராசார்ய சுவாமிகள் அவனை ஸ்ரீ மடத்திற்கு சுவீகாரம் செய்து கொண்டார். தாய்-தந்தையர் இதைப் பெரும் பாக்கியமாக ஏற்றுக் கொண்டார்கள்.

காஞ்சி ஸ்ரீ மடத்தின் பிரதம குரு ஸேவகராகவும் ஆஸ்தான பண்டிதராகவும், தர்ம கார்யராகவும் விளக்கிய புருஷோத்தமன் ஸ்ரீராம நாம சங்கீர்த்தனத்துடன் ஸ்ரீ நாராயண பக்தியை பிரதான ஆராதனையாக மேற்கொண்டார். பரமாசார்ய சுவாமிகளின் ஆசியுடன் அதைப் பக்தர்களிடையே பரப்பினார். அவருக்கு உறுதுணையாக ஸ்ரீ ஞானசேகரன் என்ற சக பாடி உதவி வந்தார். புருஷோத்தமன் தினமும் ஒரு லக்ஷத்து எட்டாயிரம் ஸ்ரீ ராமநாம ஜெபம் செய்வதை நித்திய ஆராதனையாகக் கொண்டிருந்தார். நெருங்கிய பக்தர்களையும் இவ்வாறு ஸ்ரீராம பக்தி ஆராதனை செய்ய ஊக்கப்படுத்தினார்.

புருஷோத்தமனின் பெற்றோர்கள் சிவலோக பிராப்தி அடைந்ததும், ஆசாரிய ஆத்ம போதேந்திர ஸ்வாமிகளின் சன்னியாசம் வாங்கிக் கொண்டு, அடுத்த பீடாதிபதியாகும் தகுதியைப் பெற்றார். கூடவே பாகவத தர்மமான ஸ்ரீராம நாம சங்கீர்த்தனம், ஸ்ரீராமநாம ஜெப ஆராதனை, நித்திய பூஜைகளைச் சிறப்பாகச் செய்து வந்தார்.

வார்த்தைக்கிய தசை முதிர்ந்த நிலையில் ஆசார்ய ஆத்ம போதேந்திர ஸ்வாமிகள், புருஷோத்தமருக்கு 'ஸ்ரீ பகவந்நாம போதேந்திர ஸரஸ்வதி' என குரு நாமம் சூட்டி காஞ்சி காமகோடி பரமாசார்ய பீடாதிபதியாக அமர்த்தி அருளினார். குரு கிருபையால் புகழும் பெருமையும் வளர்ந்தது. பரமாசாரியர் ஸ்ரீ பாகவத தர்மத்தைப் பரப்ப பல நூல்களை இயற்றினார். முக்கியமானவை சித்தாந்த நாமமிருத ரஸாயனம், நாமாமிருத ரஸார்ணவம், நாமாமிருத சூர்யோதயம், நாமாமிருத தரங்கம், மிருத-பிரம்ம விவேகம், ஹரிஹர வேததிக்காரம், ஹரஹர அத்வைத பூஷணம் முதலியவை. மேலும் பல அத்வைத சித்தாந்த விளக்க நூல்களையும் இயற்றியுள்ளார். பஜனை சம்பிரதாயத்தின் முதல் குருதேவர் இவர்.

பாகவத சங்கீர்த்தனம், ஸ்ரீராமநாம சித்தாந்தம் என்ற அமைப்புகள் மூலமாக ஸ்ரீபரமாசார்ய ஸ்வாமிகள் பாரத தேசமெங்கும் தர்ம யாத்திரை

செய்து ஸ்ரீ ராம நாம சங்கீர்த்தனை, ஸ்ரீ ராம நாம ஜெப உபாசனையை பரப்பினார்.

கடைசி காலத்தில் தஞ்சை மாவட்டம் திருவிடைமருதூருக்கு அருகில் உள்ள கேவிந்தபுரத்தில் காவேரிக்கரையில் வசித்து வந்தார். ஒருநாள் காவேரிப் படுகையில் மணல் பாங்கான பெருங்குழியில் அமர்ந்து, பக்கத்தில் விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களிடம் ''மணலைத் தள்ளிவிட்டு இக்குழியை மூடி விடுங்கள்'' என்றார். அந்நிலையிலேயே யோக நிஷ்டையில் ஜீவ சமாதி அடைந்தார். நிகழ்ந்தது சாலிவாகன சகம் 1614, பௌர்ணமி, புரட்டாசி மாதம் (செப்டம்பர் 1692 கி.பி.) பக்தர்கள் அந்த இடத்தில் பிருந்தாவனம் அமைத்து, பீடம் எழுப்பி, துளசி மாடம் வளர்த்து அதிஷ்டான ஆராதனைத் தலமாக்கியிருக்கிறார்கள். ஒவ்வொரு வருஷமும் புரட்டாசி பௌர்ணமி முதல் மகாளய அமாவாசை முடிய பதினைந்து நாட்களுக்கு ஜகத்குரு ஸ்ரீ பகவந் நாம போதேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் ஆராதனை உத்ஸவம் ஸ்ரீராம நாம சங்கீர்த்தனம், பஜனை, நாமஜெபம், பாகவத ஆராதனை என விமரிசையாக நடைபெற்று வருகிறது.

ஸ்ரீ ராம பக்த ஜன ஸமாஜத்தின் மாத இதழான ''ராம பக்தியில்'' ஓராண்டுக்கும் மேலாக தொடராக வெளிவந்த இந்த ஸ்ரீ ராம கர்ணாமிருதத்தினை அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க புத்தகமாக வெளியிடுவதில் மகிழ்வு எய்துகின்றோம். அனைவரும் இதனைப் படித்து இன்புறுவோமாக, ஸ்ரீராம நாமம் ஒன்றே நம்மை உய்விக்கும் சிறந்த சாதனம்.

**ஸ்ரீராம் ஜெய்ராம் ஜெயஜெய சீதா ராம்.**

யஸ்ய ஸ்மரண மாத்ரேண நாம பக்திப் ப்ரஜாயதே,
தம் நமாமி யதிஸ்ரேஷ்டம் போதேந்த்ரம் ஜகதாம் குரும்.



श्रीरामचन्द्रपरब्रह्मणे नमः

# ।। श्रीरामकर्णामृतम् ।।

# ஸ்ரீராமகர்ணாம்ருதம்

## ।।मङ्गळश्लोकाः ।।

## மங்களம் ஸ்லோகம்

मङ्गळं भगवान्विष्णुर्मङ्गळं मधुसूदनः ।
मङ्गळं पुण्डरीकाक्षो मङ्गळं गरुडध्वजः ।। *(1)*

*மங்களம் பகவான் விஷ்ணுர் மங்களம் மதுஸூதன:।*
*மங்களம் புண்டரீகாக்ஷோ மங்களம் கருடத்வஜ:॥*

ஸகல ஜகத்துக்களையும் ஆளும் வன்மை, வீரியம், கீர்த்தி, ஸம்பத்து, பரிபூரணமான ஞானம், வைராக்யம் இவைகளாகிய ஆறு குணங்களையுடைய (பகவானாகிய) ஸ்ரீ மஹா விஷ்ணுவானவர் எங்கும் நிறைந்த ஸர்வேச்வரன் நமக்கு மங்களத்தைச் செய்வாராக. மதுவென்ற அஸுரனைக் கொன்ற பகவான் க்ஷேமத்தைச் செய்வாராக. தாமரைப்பூ போன்ற கண்களையுடைய பகவான் மங்களத்தைச் செய்வாராக. கருடனே கொடியாகவுள்ள பகவான் நமக்கு மங்களத்தைத் தருவாராக.

मङ्गलं कोसलेन्द्राय महनीयगुणाब्धये ।
चक्रवर्तितनूजाय सार्वभौमाय मङ्गलम् ।। (2)

*மங்களம் கோஸலேந்த்ராய மஹனீய குணாப்தயே।*
*சக்ரவர்திதனூஜாய ஸார்வபௌமாய மங்களம்॥*

சிலாக்கியமான குணங்களுக்கு ஸமுத்ரம் போலிருக்கின்ற கோசல தேசாதிபதியாகிய ஸ்ரீராமசந்திரனுக்கு மங்களமாகுக. தசரத சக்கிரவர்த்தியின் பிள்ளையாகி ஸகல பூமண்டலத்திற்கும் ஒரே சக்கிரவர்த்தியாகிய ஸ்ரீராமசந்திரனுக்கு மங்களமாகுக.

वेदवेदान्तवेद्याय मेघश्यामलमूर्तये ।
पुंसां मोहनरूपाय पुण्यश्लोकाय मङ्गलम् ।। (3)

*வேதவேதாந்தவேத்யாய மேகஸ்யாமளமூர்தயே।*
*பும்ஸாம் மோஹனரூபாய புண்யஸ்லோகாய மங்களம்॥*

ருக், யஜுஸ், ஸாமம் முதலிய நான்கு வேதங்களாலும், வேதாந்தமென்னும் உபநிஷத்துக்களாலும் தெரியப்படக்கூடியவனாகவும், மேகம் போல் நீலமான மேனியையுடையவனாகவும், புருஷர்களுக்கும் மோகத்தைச் செய்யும் ஸுந்தரமான வடிவை உடையவனாயும், தமது கீர்த்தியைப்பாடியோருக்கு பாபங்களை நீக்கி புண்யத்தைக் கொடுக்கக்கூடியவனுமாகிய ஸ்ரீராமசந்திரனுக்கு மங்களமாகுக.

विश्वमित्रान्तरङ्गाय मिथिलानगरीपतेः ।
भाग्यानां परिपाकाय भव्यरूपाय मङ्गलम् ।। (4)

*விஸ்வாமித்ராந்தரங்காய மிதிலாநகரீபதே:।*
*பாக்யானாம் பரிபாகாய பவ்யரூபாய மங்களம்॥*

விச்வாமித்திர மஹரிஷிக்கு மிகவும் பிரியனாகவும், மிதிலாநகரத்திற்குடையவனாகிய ஜனக மஹாராஜா வின் பாக்கியத்தின் பக்குவமான பலமாகியும், மங்களகரமான உருவத்தையுடையவனாயுமாகிய ஸ்ரீராமசந்திரனுக்கு மங்களமாகுக.

पितृभक्ताय सततं भ्रातृभिस्सह सीतया ।
नन्दिताखिललोकाय रामचन्द्राय मङ्गळम् ।। *(5)*

*பித்ருபக்தாய ஸததம் ப்ராத்ருபிஸ்ஸஹ ஸீதயா।*
*நந்திதாகிலலோகாய ராமசந்த்ராய மங்களம்।।*

எப்பொழுதும் பித்ருபக்தியுடையவனாகியும், பரதன், இலட்சுமணன், ஸத்ருக்னன் என்னும் ஸகோதரர் களுடனும், ஸீதாதேவியுடனும் கூடி எப்பொழுதும் அகிலமான உலகங்களுக்கும் ஆனந்தத்தையளிப் பவனாகியுமிருக்கும் ஸ்ரீராமசந்திரனுக்கு மங்களமாகுக.

त्यक्तसाकेतवासाय चित्रकूटविहारिणे ।
सेव्याय सर्वयमिनां धीरोदात्ताय मङ्गळम् ।। *(6)*

*த்யக்தஸாகேதவாஸாய சித்ரகூடவிஹாரிணே।*
*ஸேவ்யாய ஸர்வயமினாம் தீரோதாத்தாய மங்களம்।।*

அயோத்யா நகரத்தை த்யாகம் செய்து சித்ரகூட வனத்தில் க்ரீடை செய்யும் ஸகலயோகீஸ்வரர்களாலும் ஸேவிக்கப்படத் தகுந்த கம்பீரமான ஸ்வபாவத்தை யுடைய ஸ்ரீராமசந்திரனுக்கு மங்களம்.

सौमित्रिणा च जानक्या चापबाणासिधारिणा ।
संसेव्याय सदा भक्त्या सानुजायास्तु मङ्गळम् ।। *(7)*

*ஸௌமித்ரினா ச ஜானக்யா சாபபாணாஸிதாரினா।*
*ஸம்ஸேவ்யாய ஸதா பக்த்யா ஸாநுஜாயாஸ்து மங்களம்।।*

ஜானகீதேவியாலும், வில், பாணம், வாள் இவைக ளைக் கையிலேந்திய இலட்சுமணனாலும், பக்தியுடன் எப்பொழுதும் ஸேவிக்கப்படக்கூடிய தம்பிமாருடன் கூடிய ஸ்ரீராமமூர்த்திக்கு மங்களமுண்டாகுக.

दण्डकारण्यवासाय खण्डितामरशत्रवे।
गृध्रराजाय भक्ताय मुक्तिदायास्तु मङ्गळम्।। (8)

*தண்டகாரண்ய்வாஸாய கண்டிதாமரஸத்ரவே।*
*க்ருத்ரராஜாய பக்தாய முக்தி தாய்ாஸ்து மங்களம் ।।*

தண்டகாவனத்தில் வாஸம் செய்யக்கூடிய, தேவதைகளுக்குச் சத்ருக்களாகிய அஸுரர்களை நாசம் செய்யக்கூடிய, பரமபக்தனாகிய ஜடாயுவுக்கு மோக்ஷத்தையளிக் கக்கூடிய ஸ்ரீராமசந்திரமூர்த்திக்கு மங்களமாகுக.

सादरं शबरीदत्तफलमूलाभिलाषिणे।
सौलभ्यपरिपूर्णाय सत्त्वोद्युक्ताय मङ्गळम्।। (9)

*ஸாதரம் ஸபரீதத்தப்பலமூலாபிலாஷிணே।*
*ஸௌலப்யபரிபூர்ணாய ஸத்வோத்யுக்தாய மங்களம்।।*

ஆதரவுடன் சபரியாலளிக்கப்பட்ட பழம், கிழங்கு இவைகளை அன்புடன் உட்கொண்டு, எல்லா பக்தர்களுக்கும் மிகவும் ஸுலபனாகி ஸத்வ குணம் வாய்ந்த ஸ்ரீராமனுக்கு மங்களமாகுக.

हनूमत्समवेताय हरीशाभीष्टदायिने।
वालिप्रमथनायास्तु महाधीराय मङ्गळम्।। (10)

*ஹநூமத்ஸமவேதாய ஹரீஸாபீஷ்டதாயினே।*
*வாலிப்ரமதனாயாஸ்து மஹாதீராய மங்களம்।।*

ஹனுமாருடன் கூடியவனாகி, வானர ராஜாவாகிய ஸுக்ரீவனுக்கு பீஷ்டத்தையளிக்கக் கூடியவனாகி, வாலியை ஸம்ஹாரம் செய்தவனாகி, மஹா தைரியசாலி யாகிய ஸ்ரீராமச்சந்திரனுக்கு மங்களம் உண்டாகுமாக.

श्रीमते रघुवीराय सेतुलङ्घितसिन्धवे ।
जितराक्षसराजाय रणधीराय मङ्गळम् ।। (11)

*ஸ்ரீமதே ரகுவீராய ஸேதுலங்கிதஸிந்தவே।*
*ஜிதராக்ஷஸராஜாய ரணதீராய மங்களம்॥*

ஸேது மூலமாக ஸமுத்திரத்தைத் தாண்டியவனாகி, யுத்தத்தில் மஹாதீரனாகி, ராக்ஷஸ ராஜாவாகிய ராவணனை யுத்தத்தில் ஜயித்தவனாகிய, ஸ்ரீமானாகிய (ஸ்ரீ லக்ஷ்மீ தேவியின் ஸ்வரூபமான ஸ்ரீ ஸீதாதேவி யுடன் கூடிய) ஸ்ரீரகுவீரனுக்கு மங்களமுண்டாகுக.

आसाद्य नगरीं दिव्यामभिषिक्ताय सीतया ।
राजाधिराजराजाय रामभद्राय मङ्गळम् ।। (12)

*ஆஸாத்ய நகரீம் திவ்யாமபிஷிக்தாய ஸீதயா।*
*ராஜாதிராஜராஜாய ராமபத்ராய மங்களம்॥*

தேவலோகம் போன்ற அயோத்யா நகரத்தை யடைந்து, ஸ்ரீ ஸீதாதேவியுடன் பட்டாபிஷேகம் செய்யப்பட்டு, ஸகல ராஜ ஸமூஹத்திற்கும் ஒரே சக்கிரவர்த்தியாகிய ஸ்ரீராமபத்ரனுக்கு மங்களமாகுக.

विभीषणकृते प्रीत्या विश्वाभीष्टप्रदायिने ।
जानकीप्राणनाथाय सदा रामाय मङ्गळम् ।। (13)

*விபீஷணக்ருதே ப்ரீத்யா விஸ்வாபீஷ்டப்ரதாயினே।*
*ஜானகீப்ராணநாதாய ஸதா ராமாய மங்களம்॥*

பரமப்ரீதியுடன் விபீஷணனுக்கு ஸகலா பீஷ்டங்களையுமளித்தவனாகிய, ஸ்ரீஸீதாதேவியின் பிராணங்களுக்கு அவலம்பமாகிய ஸ்ரீராமனுக்கு எக்காலத்திலும் மங்களமுண்டாக வேண்டுமாக.

श्रीरामं त्रिजगद्गुरुं सुरवरं सीतामनोनायकं
    श्यामाङ्गं शशिकोटिपूर्णवदनं चंचत्कलाकौस्तुभम्।
सौम्यं सत्यगुणोत्तमं सुसरयूतीरे वसन्तं प्रभुं
    त्रातारं सकलार्थसिद्धिसहितं वन्दे रघूणां पतिम्॥ *(14)*

*ஸ்ரீராமம் த்ரிஜகத்குரும் ஸுரவரம் ஸீதாமனோநாயகம்*
*ஸ்யாமாங்கம் ஸஸிகோடி பூர்ணவதனம்*
*சஞ்சத்கலாகௌஸ்துபம்।*
*ஸௌம்யம் ஸத்யகுணோத்தமம் ஸுஸரயூதிரே*
*வஸந்தம் ப்ரபும்*
*த்ராதாரம் ஸகலார்த்த ஸித்திஸஹிதம் வந்தே*
*ரகூனாம் பதிம்॥*

மூன்றுலகங்களுக்கும் குருவாயும், தேவச்ரேஷ்ட னாயும், ஸீதாதேவியின் மனஸைக் கவருகிறவனாயும், சியாமளமான மேனியுடையவனாயும், கோடி பூரணசந்திரன் போன்ற முகமுடையவனாயும், ஒளிவசைகின்ற கௌஸ்துபமணியை யுடையவனாயும், சாந்தனாயும், உத்தமமான ஸத்ய குணமுடையவனாயும், ஸரயூ நதி தீரத்தில் வஸிப்பவனாயும், ஸர்வலோகங் களுக்கும் பிரபுவாயும், ரக்ஷகனாயும், ஸகலவிதமான இஷ்டார்த்த ஸித்திகளுடன் கூடியவனும், ஸ்ரீரகுவம்ஸத்திற்கு நாயகனுமாகிய ஸ்ரீராமனை நான் வணங்குகிறேன்.

श्रीराघवं दशरथात्मजमप्रमेयं सीतापतिं रघुवरान्वयरत्नदीपम् ।
आजानुबाहुमरविन्ददळायताक्षं रामं निशाचरविनाशकरं नमामि ॥

*ஸ்ரீராகவம் தஸரதாத்ம ஜமப்ரமேயம் ஸீதாபதிம்*
*ரகுவரான்வய ரத்னதீபம்।*
*ஆஜானுபாஹு²மரவிந்த தளாய தாக்ஷம்*
*ராமம் நிஸாச ரவினாஸகரம் நமாமி॥*

ரகு சக்கிரவர்த்தியின் குலத்தில் பிறந்தவனாயும், தசரத மஹாராஜாவின் குமாரனாயும், இப்போர்க் கொந்தவனென்றறியத் தகாதவனாயும், ஸீதாபதியாயும், ரகுவின் வம்ஸத்திற்கு ரத்ன தீபம் போலிருப்பவனாயும், (ரகு குலமாகிய சமுத்திரத்திற்கு பூர்ண சந்திரன் போலிருப்பவனாயும்), முழங்கால் வரையில் நீண்ட கைகளையுடையவனாயும், தாமரை இதழ் போல் நீண்ட கண்களையுடையவனாயும், அரக்கர்களை அழிப்ப வனாயு மிருக்கும் ஸ்ரீராமனை நான் நமஸ்கரிக்கின்றேன்.

श्रीरामचन्द्र करुणाकर राघवेन्द्र राजेन्द्रचन्द्र रघुवंशसमुद्रचन्द्र ।
सुग्रीवनेत्रयुगळोत्पलपूर्णचन्द्र सीतामनःकुमुदचन्द्र नमो नमस्ते ॥

*ஸ்ரீராமச் சந்த்ர கருணாகர ராகவேந்த்ர*
*ராஜேந்த்ரசந்த்ர ரகுவம்ஸ ஸமுத்ரசந்த்ர।*
*ஸு²க்ரீவ நேத்ரயுகளோத்பல பூர்ணசந்த்ர*
*ஸீதாமன: குமுதசந்த்ர நமோ நமஸ்தே॥* ***(16)***

ஓ! கருணாநிதியே! ரகுகுல சிரேஷ்டனே! ராஜசிரேஷ்டர் களுக்கு ஆனந்தத்தை உண்டு பண்ணுகிறவனே! ரகுவம்சமாகும் சமுத்திரத்துக்கு சந்திரன் போன்றவனே! ஸு²க்ரீவனுடைய இரண்டு கண்களாகிய ஆம்பல (அல்லி) ப்புஷ்பங்களுக்கு பூர்ண சந்திரன் போன்றவனே! ஸீதையின் மனமாகிய அல்லி

புஷ்பத்துக்குச் சந்திரனாயிருப்பவனே! ஸீதையின் மனமாகிய அல்லிபுஷ்பத்துக்குச் சந்திரனாயிருப் பவனே! ஓ! ஸ்ரீ ராம சந்திரா! உனக்கு அனந்த நமஸ்காரம்.

सीतामनोमानसराजहंस संसारसन्तापहर क्षमावन् ।
श्रीराम दैत्यान्तक शान्तरूप श्रीतारकब्रह्म नमो नमस्ते ।। *(17)*

*ஸீதா மனோமானஸ ராஜஹம்ஸ ஸம்ஸாரஸன்தாபஹர க்ஷமாவன்।*
*ஸ்ரீராம தைத்யான்தக ஸான்தரூப ஸ்ரீதாரகப்ரஹ்ம நமோ நமஸ்தே॥*

ஓ! ஸீதா தேவியின் மனதாகிய மானஸ ஸரஸ்ஸில் விளையாடும் அன்ன பக்ஷியே! ஓ! ஸம்ஸார துக்கங் களையகற்றக் கூடியவனே! ஓ! பொறுமையுடையவனே! அஸுரர்களுக்கு யமன் போன்றவனே! சாந்தமான உருவமுடையவனே! ஓ! ஸம்ஸார துக்கத்தையகற்றக் கூடிய தாரகபிரம்மமே! ஸ்ரீராமசந்திரா! உனக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

विष्णो रागव वासुदेव नृहरे देवौघचूडामणे
संसारार्णवकर्णधारक हरे कृष्णाय तुभ्यं नमः ।। *(18)*

*விஷ்ணோ ராகவ வாஸுதேவ ந்ருஹரே தேவௌகசூடாமணே।*
*ஸம்ஸாரார்ணவகர்ணதாரக ஹரே க்ருஷ்ணாய துப்யம் நம:॥*

ஓ! எங்கும் நிறைந்தவனே! ரகுவம்ஸத்திலு தித்தவனே! வசுதேவபுத்திரனே! நரஸிம்மனே! ஓ! தேவச்ரேஷ்டனே! ஸம்ஸாரமாகிய ஸமுத்திரத்தில் படகோட்டுகிறவனே! கஷ்டங்களை அபஹரிக்

கின்றவனே! கிருஷ்ணாவதாரத் தையெடுத்த உமக்கு நமஸ்காரம் இருக்கட்டும்.

सुग्रीवादिसमस्तवानरवरैस्संसेव्यमानं सदा
विश्वामित्रपराशरादिमुनिभिस्संस्तूयमानं भजे ।। (19)

*ஸுக்ரீவாதி ஸமஸ்த வானரவரைஸ் ஸம்ஸேவ்யமானம் ஸதா।*
*விஸ்வாமித்ர பராஸராதி முனிபி: ஸம்ஸ்தூயமானம் பஜே॥*

எப்பொழுதும் சுக்ரீவன் முதலான வானரஸ்ரேஷ்டர்களால் ஸேவிக்கப்பட்டவரும், விச்வாமித்திரர், பராசரர் முதலிய முனிவர்களால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவருமான ஸ்ரீராமனை பூஜிக்கிறேன்.

रामं चन्दनशीतलं क्षितिसुतामोहाकरं श्रीकरं
वैदेहीनयनारविन्दमिहिरं सम्पूर्णचन्द्राननम् ।
राजानं करुणासमेतनयनं सीतामनोनन्दनं
सीतादर्पणचारुगण्डललितं वन्दे सदा राघवम् ।। (20)

*ராமம் சந்தனஸீதலம் க்ஷிதிஸுதாமோஹாகரம் ஸ்ரீகரம்*
*வைதேஹீநயனாரவிந்தமிஹிரம் ஸம்பூர்ணசந்த்ரானனம்।*
*ராஜானம் கருணாஸமேதநயனம் ஸீதாமனோநந்தனம்*
*ஸீதாதர்பண சாருகண்டலலிதம் வந்தே ஸதா ராகவம்॥*

ஸகல ஜனங்களையும் ஆனந்தப்படுத்துகிறவனாயும், சந்தனம் போல் குளிர்ந்தவனாயும், ஸீதாதேவிக்கு மோஹத்தைச் செய்பவனாயும், ஸம்பத்தைக் கொடுப்பவனாயும், ஸீதாதேவியின் கண்களாகும் தாமரைப்பூவுக்கு சூரியன் போன்றவனாயும், பூர்ண சந்திரன் போன்ற முகமுடையவனாயும், பூமண்டலத்துக் கரசனாகவும், கருணை புரிந்த கண்களையுடையவனாயும், ஸீதாதேவியின் மனஸை ஸந்தோஷப்படுத்து

கிறவனாயும், ஸீதாதேவியின் கண்ணாடி போன்ற கன்னங்களில் மகிழ்ச்சியுடையவனாயுமிருக்கின்ற ஸ்ரீராகவனை எப்பொழுதும் வணங்குகிறேன்.

जानाति राम तव नामरुचिं महेशो
  जानाति गौतमसती चरणप्रभावम् ।
जानाति दोर्बलपराक्रममीशचापो
  जानात्यमोघपटुबाणगतिं पयोधिः ।। **(21)**

*ஜானாதி ராம தவ நாமருசிம் மஹேஸோ*
*ஜானாதி கௌதமஸதீ சரணப்ரபாவம்।*
*ஜானாதி தோர்பல பராக்ரமமீஸசாபோ*
*ஜானாத்ய மோஹபடுபாணகதிம் பயோதி:॥*

ஓ! ஸ்ரீராமசந்திரா! உன் திருநாமதேயத்தின் ருசியை பரமேச்வரன்தான் அறிகிறார். உன்னுடைய பாதார விந்தத்தின் மஹிமையை பதிவிரதா சிரோமணியாகிய அகலிகைதான் அறிந்தவள். உன் கைகளின் பல பராக்ரமத்தை பரமசிவனுடைய வில்லாகிய திரியம்பக தனுஸுதான் அறிகிறது. அமோகமான உன் பாணத்தின் கதியை ஸமுத்திரராஜாவேதான் அறிகிறான் (மற்று யாரும் இதுகளை அறியார்).

माता रामो मत्पिता रामचन्द्रो भ्राता रामो मत्सखा राघवेशः ।
सर्वस्वं मे रामचन्द्रो दयालुर्नान्यं दैवं नैव जाने न जाने ।। **(22)**

*மாதா ராமோ மத்பிதா ராமசந்த்ரோ ப்ராதா ராமோ*
*மத்ஸகா ராகவேஸ:।*
*ஸர்வஸ்வம் மே ராமசந்த்ரோ தயாளுர்நான்யம்*
*தைவம் நைவ ஜானே ந ஜானே॥*

எனக்கு ஸ்ரீராமசந்திரனே தாயார். என் பிதாவும் ஸ்ரீராமனே. என் ஸகோதரன் ஸ்ரீராமனே. ஸ்ரீராகவனே

எனக்குத் தோழன். இப்படியே என்னுடைய ஸர்வ சொத்தும் தயாளுவாகிய ஸ்ரீராமசந்திரனேயாகிறான். யான் வேறொரு தெய்வத்தையும் ஒருக்காலும் அறியவே அறியேனே ஸ்ரீராமசந்திரா.

विमलकमलनेत्रं विस्फुरन्नीलगात्रं तपनकुलपवित्रं दानवध्वांतमित्रं ।
भुवनशुभचरित्रं भूमिपुत्रीकळत्रं दशरथवरपुत्रं नौमि रामाख्यमित्रम् ।।

*விமலகமலநேத்ரம் விஸ்புரன்னீலகாத்ரம்*
*தபனகுலபவித்ரம் தானவத் வாம்தமித்ரம்।*
*புவனஸுப சரித்ரம் பூமிபுத்ரீகளத்ரம் தஸரதவர*
*புத்ரம் நௌமி ராமாக்ய மித்ரம்॥*

நிர்மலமான தாமரை போன்ற கண்களுடைய வனாயும், சோபிக்கும் நீலநிறமான மேனியையுடைய வனாயும், சூரியவம்சத்தை பரிசுத்தம் செய்தவனாயும், அஸுரர்களாகிய இருட்டுக்கு சூரியனாகியும், பூமியில் பிரஸித்தமான ஸுபசரித்ரமுடையவனாயும், பூமி புத்ரியான ஸீதாதேவியை மனைவியாக உடைய வனாயும், தசரதரின் உத்தமனான புதல்வனாயுமிருக்கும் ஸ்ரீராமனென்ற பெயருடைய எனது சிநேகிதனை வணங்குகிறேன்.

मार्गेमार्गे शाखिनां रत्नवेदी वेद्यांवेद्यां किन्नरीबृन्दगीतम् ।
गीतेगीते मञ्जुळालापगोष्ठी गोष्ठ्यांगोष्ठ्यां त्वत्कथा रामचन्द्र ।। *(24)*

*மார்கே மார்கே ஸாகினாம் ரத்னவேதீ வேத்யாம்*
*வேத்யாம் கின்னரீப்ருந்தகீதம்।*
*கீதேகீதே மஞ்ஜுலாலாப கோஷ்டீ கோஷ்ட்யாம்*
*கோஷ்ட்யாம் த்வத்கதா ராமசந்த்ர॥*

ஒவ்வொரு வழியிலும் மரங்களுடைய மூட்டில் ரத்னமயமான திண்ணைகளிருக்கின்றன. ஒவ்வொரு

திண்ணையிலும் கந்தர்வ ஸ்திரீகளுடைய இன்பமான ஸங்கீதம் நடைபெறுகிறது. ஒவ்வொரு கீதத்திலும் மனோஹரமான ஆலாபனம் செய்யும் கோஷ்டியிருக்கிறது. ஒவ்வொரு கோஷ்டியிலும் ஓ! ஸ்ரீ ராமசந்திரா! உன்னுடைய கதைகளே பாடப்படுகின்றன.

**वृक्षेवृक्षे वीक्षिताः पक्षिसङ्घाः सङ्घेसङ्घे मञ्जुलामोदवाक्यम् ।**
**वाक्येवाक्ये मञ्जुलालापगोष्ठी गोष्ठ्यांगोष्ठ्यां त्वत्कथा रामचन्द्र ।।** ***(25)***

*வ்ருக்ஷேவ்ருக்ஷே வீக்ஷிதா: பக்ஷிஸங்கா: ஸங்கேஸங்கே மஞ்ஜுலாமோதவாக்யம்।*
*வாக்யேவாக்யே மஞ்ஜுலாலாப கோஷ்டீ கோஷ்ட்யாம் கோஷ்ட்யாம் த்வத்கதா ராமசந்த்ர।।*

ஸ்ரீராமசந்திரா! ஒவ்வொரு மரத்திலும் பக்ஷிக்கூட்டங்கள் பார்க்கப்படுகின்றன. ஒவ்வொரு பக்ஷிக்கும்பலிலும் மனோஹரமான இனிமையான வாக்கியமிருக்கின்றது. ஒவ்வொரு வாக்கியத்திலும் மதுரமான ஆலாய கோஷ்டியும், ஒவ்வொரு கோஷ்டியிலும் உன்னுடைய திவ்யகதையும் கேட்கப்படுகின்றது. (பக்ஷிகளும், கந்தர்வாதிகணங்களும் எங்கும் ஸ்ரீராமகதையை பாடுகிறார்களென்று தாத்பர்யம்).

**दुरिततिमिरचन्द्रो दुष्टकञ्जातचन्द्रः**
**सुरकुवलयचन्द्रस्सूर्यवंशाब्धिचन्द्रः ।**
**स्वजननिवहचन्द्रश्शत्रुराजीवचन्द्रः**
**प्रणतकुमुदचन्द्रः पातु मां रामचन्द्रः ।।** ***(26)***

*துரிததிமிரசந்த்ரோ துஷ்டகஞ்ஜாதசந்த்ர:*
*ஸுரகுவலய சந்த்ரஸ்ஸூர்யவம்ஸாப்திசந்த்ர:।*
*ஸ்வஜனனிவஹசந்த்ரஸ்ஸத்ருராஜீவசந்த்ர:*
*ப்ரணதகுமுதசந்த்ர: பாது மாம் ராமசந்த்ர:।।*

பாபமாகும் இருளுக்கு சந்திரன் போலிருப்பவனும், துஷ்டர்களாகிய தாமரைப்பூவுக்கு சந்திரன் போன்றவனும், தேவர்களாகிய அல்லிப்பூவுக்கு சந்திரன் போன்றவனும், சூரியவம்சமாகிய ஸமுத்திரத்திற்கு சந்திரன் போலிருப்பவனும், தன்னைச் சேர்ந்த ஜனக் கும்பலுக்கு சந்திரன் போல ஆனந்தத்தைத் தருகிற வனும், சத்துருக்களாகிய தாமரைப் புஷ்பங்களுக்கு சந்திரனாயிருப்பவனும், வணங்கிய பக்தர்களாகிய அல்லிப்பூக்களுக்கு சந்திரனுமாகயிருப்ப வனுமாகிய ஸ்ரீராமச்சந்திரன் என்னை ரக்ஷிப்பானாக.

(சந்திரனுதித்தால் இருள் போகும், தாமரைப்பூ வாடும். அல்லிப்பூ களிக்கும். ஸமுத்திரம் பொங்கும். எல்லோருக்கும் ஆனந்தம் உண்டாகுமென்னும் பொருளை ரூபித்து கவி எழுதியிருக்கிறார்.)

**कल्याणदं कौशिकयज्ञपालं कलानिधिं काञ्चनशैलधीरम् ।**
**कञ्जातनेत्रं करुणासमुद्रं काकुत्स्थरामं कलयामि चित्ते ।।** ***(27)***

***கல்யாணதம் கௌஸிகயஞுபாலம் கலாநிதிம்***
***காஞ்சன ஸைலதீரம்।***
***கஞ்ஜாத நேத்ரம் கருணா ஸமுத்ரம் காகுஸ்தராமம்***
***கலயாமி சித்தே॥***

க்ஷேமத்தைக் கொடுக்கின்றவனாயும், விச்வாமித்ர முனியின் யாகத்தை ரக்ஷித்தவனாயும், ஸகல கலைகளுக்கும் இருப்பிடமாயும், மேரு பர்வதம் போல் மஹாதீரனாயும், தாமரைக் கண்ணனாயும், கருணைக்கடலாயும் இருக்கின்ற ககுத்ஸ்த வம்சத்தில் பிறந்த ஸ்ரீராமனை நான் மனதில் தியானிக்கின்றேன்.

राजीवायतलोचनं रघुवरं नीलोत्पलश्यामलं
मन्दाराञ्चितमण्डपे सुललिते सौवर्णके पुष्पके।
आस्थाने नवरत्नराजिखचिते सिंहासने संस्थितं
सीतालक्ष्मणलोकपालसहितं वन्दे मुनीन्द्रास्पदम् ।। *(28)*

*ராஜீவாயதலோசனம் ரகுவரம் நீலோத்பலஸ்யாமளம்*
*மந்தாரான்சிதமண்டபே ஸுலலிதே ஸௌவர்ணகே புஷ்பகே।*
*ஆஸ்தானே நவரத்ன ராஜிகச்சிதே ஸிம்ஹாஸனே ஸம்ஸ்திதம்*
*ஸீதாலக்ஷ்மணலோகபா லஸஹிதம் வந்தே முனீந்த்ராஸ்பதம்।।*

தாமரைப்பூ போல நீண்ட கண்களையுடையவனும், நீலோத்பல புஷ்பம் போல் நீலவர்ண மேனியுடையவனும், மந்தாரபுஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட மண்டபத்தில் அழகான சுவர்ணமயமான புஷ்பகத்தில், தர்பார் மண்டபத்தில் நவரத்னங்களினாலிழைக்கப்பட்ட சிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவனும், மஹரிஷிகளால டயத்தக்க ஸ்தானமாயிருப் பவனும், ஸீதா தேவி, லக்ஷ்மணன், இந்திராதி லோகபாலாள் முதலிய பேர்களுடன் கூடியவனுமாகிய ரகு சிரேஷ்டனாகிய ஸ்ரீராமனை யான் வணங்குகிறேன்.



ध्याये रामं सुधांशुं नतसकलभवारण्यतापप्रहारं
श्यामं शान्तं सुरेन्द्रं सुरमुनिविनुतं कोटिसूर्यप्रकाशम्।
सीतासौमित्रिसेव्यं सुरनरसुगमं दिव्यसिंहासनस्थं
सायाह्ने रामचन्द्रं स्मितरुचिरमुखं सर्वदा मे प्रसन्नम्॥ *(29)*

*த்யாயே ராமம் ஸுதாம்ஸும் நதஸகலபவாரண்யதாபப்ரஹாரம்*
*ஸ்யாமம் ஸாந்தம் ஸுரேந்த்ரம் ஸுரமுனிவினுதம் கோடி ஸுர்யப்ரகாஸம்।*
*ஸீதாஸௌமித்ரிஸேவ்யம் ஸுரநரஸுகமம் திவ்ய ஸிம்ஹா ஸநஸ்தம்*
*ஸாயாஹ்னே ராமசந்த்ரம் ஸ்மித ருசிரமுகம் ஸர்வதா மே ப்ரஸன்னம்॥*

தன்னை வணங்கிய ஸகல ஜனங்களுக்கும் ஸம்ஸாரமாகும் பெருங்காட்டிலுண்டாகக் கூடியதான (ஆத்யாத்மிகம்-ஆதி தைவிகம்-ஆதி பௌதிகம் என்னும்) தாபத்ரயத்தை நாசம் செய்யக்கூடிய சந்திரனாகியும், சியாமள வர்ணமுடையவனும், ஸாந்த ஸ்வரூபமுடையவனும், ஸகல தேவதைகளிலும் மிக உயர்ந்தவனும், தேவர்கள் ரிஷிகள் இவர்களால் துதிக்கப்பட்டவனும், கோடி சூரியர்களுக்கொப்பான பிரகாச முடையவனும், ஸீதா லக்ஷ்மணர்களால் ஸேவிக்கப்பட்டவனும், தேவர்களாலும் மனிதர்களாலும் அடையத்தகுந்தவனும், திவ்ய ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவனும், புன்னகை கொண்ட அழகான முகத்தையுடையவனும், பக்தனாகிய என் விஷயத்தில் எப்பொழுதும் பிரஸன்னனாயிருப்பவனும் ஆகிய ஸ்ரீராமசந்திரனை ஸாயங்கால வேளையில் தியானிக்கின்றேன்.

इन्द्रनीलमणिसन्निभदेहं वन्दनीयमसकृन्मुनिबृन्दैः ।
लम्बमानतुलसीवनमालं चिन्तयामि सततं रघुवीरम् ।। *(30)*

*இந்த்ரநீலமணிஸன்னிபதேஹம் வந்தனீயமஸக்ருன்*
*முனிப்ருந்தை:।*
*லம்பமான துளஸீவனமாலம் சிந்தயாமி ஸததம் ரகுவீரம்॥*

இந்திர நீலமணிக்கொத்த கருமேனியையுடையவனும், எப்பொழுதும் மகரிஷிகணங்களால் வணங்கப் பட்டவனும், கணைக்கால் வரையில் தொங்குகின்ற துளஸிவனமாலையை (துளஸி முதலிய விசித்திரமான நிறமுடைய பத்திரங்களால் நிற்மிக்கப்பட்டு ஒருநாளும் வாடாமலிருக்கும் மாலையை) தரித் தவனும் ஆகிய ஸ்ரீரகுவீரனை எப்பொழுதும் நினைக்கிறேன்.

सम्पूर्णचन्द्रवदनं सरसीरुहाक्षंमाणिक्यकुण्डलधरं मकुटाभिरामं ।
चांपेयगौरवसनं शरचापहस्तं श्रीरामचन्द्रमनिशं मनसा स्मरामि ।। *(31)*

*ஸம்பூர்ண சந்த்ரவதனம் ஸரஸீருஹாக்ஷம்*
*மாணிக்யகுண்ட லதரம் மகுடாபிராமம்।*
*சாம்பேயகௌரவஸனம் ஸரசாபஹஸ்தம் ஸ்ரீராமசந்த்ர*
*மனிஸம் மனஸா ஸமராமி॥*

பூர்ணிமா சந்திரன் போன்ற முகமுடையவனும், செந்தாம ரைக் கண்ணனும், மாணிக்யத்தால் (கருடப் பச்சைக்கல்லால்) இழைத்த குண்டலம் தரித்தவனும், ரத்னகிரீடம் தரித்தவனும், சம்பகப்பூ நிறமுள்ள ஆடை தரித்தவனும், அம்பும் வில்லும் கையில் தரித்தவனும் ஆகிய ஸ்ரீராமனை எப்பொழுதும் மனதால் நினைக்கிறேன்.

मातुः पार्श्वे चरन्तं मणिमयशयने मञ्जुभूषांचिताङ्गं
मन्दंमन्दं पिबन्तं मुकुळितनयनं स्तन्यमन्यस्तनाग्रम् ।
अङ्गुल्यग्रैः स्पृशन्तं सुखपरवशया सस्मितालिङ्गिताङ्गं
गाढं गाढं जनन्या कलयतु हृदयं मामकं रामबालम् ।। (32)

*மாது: பார்ஸ்வே சரந்தம் மணிமயஸயனே மஞ்ஜுள*
*பூஷாம்ச்சிதாங்கம்*
*மந்தம் மந்தம் பிபந்தம் முகுளிதநயனம் ஸ்தன்*
*யமன்யஸ்தநாக்ரம்।*
*அங்குள்யக்ரை: ஸ்ப்ருஸந்தம் ஸுகபரவஸயா*
*ஸஸ்மிதாலிங்கிதாங்கம்*
*காடம் காடம் ஜனன்யா கலயது ஹ்ருதயம்*
*மாமகம் ராமபாலம்॥*

மணிமயமான சயனத்தில் படுத்திருக்கும் தாயின் அருகில் ஸஞ்சரிக்கின்றவனும், அழகான ஆபரணங்களால் சோபிக்கின்றவனும், மெள்ள மெள்ள கண்ணை மூடிக்கொண்டு தாயின் பாலைக்குடிப்பவனும், மற்றொரு ஸ்தனத்தின் நுனியை கைவிரல்களால் தொடுகின்றவனும் (ஆயிரம் வருஷ காலம் கடும் தவம் செய்தும் மகா யோகிகளாலும் பார்க்க முடியாத ஜகதீசனாகிய பரமாத்மாவே தன் வயிற்றில் பிறந்து தான் அவருக்கு பாலூட்டக்கூடிய பாக்கியம் தனக்கு வாய்த்ததே என்று) ஆனந்தக் கடலில் முழுகி மெய்மறந்திருக்கின்ற தாயாராகிய யசோதையால் புன்னகையுடன் கட்டியாகி திரும்பத்திரும்ப ஆலிங்கனம் செய்து கொள்ளப்பட்டவனும் ஆகிய குழந்தை வடிவமுள்ள ஸ்ரீராமனை என் மனது த்ருடமாய் தியானம் செய்யட்டும்.

रामाभिरामं नयनाभिरामं वाचाभिरामं वदनाभिरामं ।
सर्वाभिरामं च सदाभिरामं वन्दे सदा दाशरथिं च रामम् ।। (33)

*ராமாபிராமம் நயனாபிராமம் வாசாபிராமம் வதனாபிராமம்।*
*ஸர்வாபிராமம் ச ஸதாபிராமம் வந்தே ஸதா*
*தாஸரதிம் ச ராமம்॥*

அழகான பெண்மணிகளைவிட அதிகம் அழகாயிருப்பவனும், கண்களுக்கு ஆனந்தம் தருகிறவனும், மதுரமான வார்த்தைகளுடையவனும், அழகான முகமுள்ளவனும், ஸர்வாவயவத்திலும், ஸதாகாலத்திலும் ஸௌந்தரமாயிருப்பவனு மாகிய, தசரதன் புதல்வனாகிய ஸ்ரீராமனை ஸதா நான் வணங்குகிறேன்.

राशब्दोच्चारमात्रेण मुखान्निर्याति पातकाः ।
पुनः प्रवेशभीत्या च मकारस्तु कवाटवत् ।। (34)

*ராஸப்தோச்சாரமாத்ரேன முகான்னிர்யாதி பாதகா:।*
*புன:ப்ரவேஸபீத்யா ச மகாரஸ்து கவாடவத்॥*

'ரா - ம என்கிற இரண்டு எழுத்துக்களின் ஸ்வாரஸ்யத்தைக் காட்டி, ராமநாமத்தின் மஹிமையை வெளியிடுகிறார் கவி' ராம நாமத்தைச் சொல்லுவதன் பொருட்டு 'ரா' என்னும் வர்ணத்தைச் சொல்லி வாயைத் திறக்கின்ற மாத்திரத்தில் இவனுடைய ஸகல பாபங்களும் முகம் வழியாக வெளிக்கிளம்பி விடுகின்றன. அந்தப் பாபங்கள் திரும்பவும் (வராமலிருப்பதற்காக) வந்துவிடுமோ என்ற பீதியால் 'ம' என்னும் எழுத்து கதவுபோலிருக்கின்றது. கதவைச் சாத்தி விடுவதுபோல் மகாரத்தைச் சொல்லும்போது வாய் உதடுகள் மூடி விடுகின்றன. இதனால் ராமநாமம் இருக்கும் பாபங்களைப் போக்கி திரும்ப பாபம் வராமல் காப்பாற்றுகின்றதென்று கருத்து.

अनर्घमाणिक्यविराजमानश्रीपादुकालङ्कृतशोभनाभ्याम् ।
अशेषबृन्दारकवन्दिताभ्यां नमो नमो रामपदाम्बुजाभ्याम् ।। *(35)*

*அனர்கமாணிக்ய விராஜமான ஸ்ரீபாதுகாலங்க்ருத ஸோபனாப்யாம்।*
*அஸேஷ ப்ருந்தாரகவந்திதாப்யாம் நமோ நமோ ராமபதாம்புஜாப்யாம்॥*

விலைமதிக்க முடியாத மாணிக்ய ரத்னங்களால் செய்த பாதுகைகளால் சோபிக்கின்ற, ஸகல தேவர்களாலும் வந்தனம் செய்யப்பட்ட ஸ்ரீராமனின் பாதாரவிந்தங்களுக்கு திரும்பத் திரும்பவும் நமஸ்காரம்.

चलत्कनककुण्डलोल्लसितदिव्यगण्डस्थलं
चराचरजगन्मयं चरणपद्मगङ्गाश्रयम् ।
चतुर्विधफलप्रदं चरमपीठमध्यस्थितं
चिदंशमखिलास्पदं दशरथात्मजं चिन्तये ।। *(36)*

*சலத்கனககுண்ட லோல்லஸித திவ்யகண்டஸ்தலம்*
*சராசர ஜகன்மயம் சரணபத்ம கங்காஸ்ரயம்।*
*சதுர்விதபலப்ரதம் சரமபீடமத்யஸ்திதம்*
*சிதம்ஸ மகிலாஸ்பதம் தஸரதாத்மஜம்ச் சிந்தயே॥*

காதில்அசையக்கூடிய ஸுவர்ண குண்டலங்களால் ப்ரகாசிக்கின்ற கன்னப் பிரதேசங்களையுடையவனும், ஸ்தாவரம், ஜங்கமம் என்னும் இருவகையான ஜகத்ஸ்வரூபனும், பாதார விந்தத்தில் நின்று கிளம்பும் கங்கையையுடையவனும், தர்மம், அர்தம்,காமம், மோக்ஷம் என்னும் நான்கு வகை புருஷார்த்தங்களைக் கொடுப்பவனும், உத்தமமான ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவனும், ஸகல ஜகத்துக்கும் ஆதாரமாகிய சிதானந்த ரூபியாகிய பரப்ரம்மத்தின் அம்சமாயிருப்பவனுமாகிய தசரதராமனை சிந்திக்கின்றேன்.

सनन्दनमुनिप्रियं सकलवर्णवेदात्मकं
समस्तनिगमागमस्फुरिततत्त्वसिंहासनम् ।
सहस्रनयनाब्जजाद्यमरबृन्दसंसेवितं
समष्टिपुरवल्लभं दशरथात्मजं चिन्तये ॥ *(37)*

***ஸனந்தன முனிப்ரியம் ஸகலவர்ண வேதாத்மகம்***
***ஸமஸ்த நிகமாகமஸ்புரிததத்வஸிம்ஹாஸனம்।***
***ஸஹஸ்ரநயனாப்ஜஜாத்யமரப்ருந்தஸம்ஸேவிதம்***
***ஸமஷ்டி புரவல்லபம் தஸரதாத்மஜம்ச் சிந்தயே॥***

ஸனந்தன மகரிஷிக்கு மிகப்ரியனும், ஸர்வ வர்ண ரூபனும், அகில வேத ஸ்வரூபனும், ஸகல வேதசாஸ்திரங்களினால் பிரகாசிக்கப்பட்ட தத்வங்களை ஸிம்ஹாஸனமாகவுடையவனும் (ஸாங்க்யம், சாக்தம் முதலிய சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் 24 அதவா 36 முதலிய தத்வங்களே ப்ரபஞ்சஸ்வரூபம். அதற்கெல்லாம் மீறிய தத்வாதீத வஸ்துவான என்ற பொருள்) இந்திரன், ப்ரம்மன் முதலிய தேவகோடிகளால் ஸேவிக்கப்பட்டவனும், ஸகல பிரம்மாண்ட நாயகனுமான தசரத குமாரனை தியானிக்கின்றேன்.

जाग्रत्स्वप्नसुषुप्तिकालविलसत्तत्त्वात्मचिन्मात्रकं
चैतन्यात्मकमाधिपापरहितं भूम्यादितन्मात्रकम् ।
शांभव्यादिसमस्तयोगकुळकं सांख्यादितत्त्वात्परं
शब्दावाच्यमहं नमामि सततं व्युत्पत्तिनाशात्परम् ॥ *(38)*

***ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்தி காலவிலஸத்தத்வாத்ம சின்மாத்ரகம்***
***சைதன்யாத்மக மாதிபா பரஹிதம் பூம்யாதிதன்மாத்ரகம்।***
***ஸாம்பவ்யாதி ஸமஸ்த யோககுலகம் ஸாம்க்யாதி தத்வாத்பரம்***
***ஸப்தாவாச்யமஹம் நமாமி ஸததம் வ்யுத் பத்தி நாஸாத்பரம்॥***

ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தியென்னும் மூன்று காலங்களிலும்அழிவும் மாறுதலுமில்லாமல் ஏகரீதியாய் ப்ரகாசிக்கக்கூடிய நாசரகிதமான சித்ரூபமாகிய ஆத்மதத்வரூப மாயிருக்கக் கூடியதும், சேதன சொரூபமாய் = ஞான ரூபமாய் = ஜடரூபமில்லாமல் ஸ்வயம் பிரகாசமாயிருக்கக்கூடியதும், ஆகையினாலேயே ஆதிவ்யாதிகளும், அதுக்குக் காரணமாகிய பாபங்களும் இல்லாத வஸ்துவாயும், பூமி, ஜலம், ஜோதி, வாயு, ஆகாஸம் என்னும் ஐந்து பூதங்களின் தன்மாத்ரைகள் எனக்கூடிய சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்னும் ஐந்து குண ரூபியாயிருப்பதும், சாம்பவீ முதலிய எல்லாவிதமான யோகஸ்வரூபமாகியதும், ஸாங்க்யம் முதலிய சாஸ்திரங்களில் விவரிக்கும் தத்வங்களைவிட மேலான அதுகளுக்கு (ஸாக்ஷியாகி) ஆதாரவஸ்துவாயும், ஒருவகை சப்தங்களாலும் ஸாக்ஷாத்தாக இவ்விதமென்று சொல்லிக் காண்பிக்க முடியாத வாக்குக்கும், மனதுக்கும் எட்டாத வஸ்துவும், விவிதமான உத்பத்தி - இருப்பு - அழிவு முதலிய விகாரங்களையுடைய ப்ரபஞ்சம் நாசமான பிறகும், ஸர்வப்ரபஞ்சத்திற்கும் அதன் அழிவுக்கும், அதீதமாய் ஸாக்ஷி பூதமாய் அதிஷ்டான ரூபமாயிருக்கக்கூடியதுமாகிய பராபரஸ்வரூபமான பரமாத்மவஸ்துவாகிய ஸ்ரீராமச்சந்திரனை எப்பொழுதும் வணங்குகிறேன்.

**इक्ष्वाकुवंशार्णवजातरत्नं सीताङ्गनायौवनभाग्यरत्नम् ।**
**वैकुण्ठरत्नं मम भाग्यरत्नं श्रीरामरत्नं शिरसा नमामि ॥** ***(39)***

***இஷ்வாகு வம்ஸார்ணவ ஜாதரத்னம்***
***ஸீதாங்கனாயௌவன பாக்யரத்னம்।***
***வைகுண்டரத்னம் மம பாக்யரத்னம்***
***ஸ்ரீராமரத்னம் ஸிரஸா நமாமி॥***

இக்ஷ்வாகு வம்சமாகிய சமுத்தரத்தில் பிறந்த ரத்னமும், ஸீதா தேவியின் யௌவன சௌக்கியத்தின் பாக்யரத்னமும், வைகுண்டத்தில் விளங்கும் ரத்னமும், எனது பாக்யத்தால் அகப்பட்ட ரத்னமும் ஆகிய ஸ்ரீராமனென்னும் ரத்னத்தை சிரஸால் வணங்குகிறேன்.

इक्ष्वाकुनन्दनं सुग्रीवपूजितं त्रैलोक्यरक्षकं सत्यसन्धं सदा।
राघवं रघुपतिं राजीवलोचनं रामचन्द्रं भजे राघवेशं भजे॥ *(40)*

*இக்ஷ்வாகுநந்தனம் ஸுக்ரீவ பூஜிதம்*
*த்ரைலோக்யரக்ஷகம் ஸத்யஸந்தம் ஸதா।*
*ராகவம் ரகுபதிம் ராஜீவலோசனம்*
*ராமசந்த்ரம் பஜே ராகவேஸம் பஜே॥*

இக்ஷ்வாகு வம்சத்திற்கு ஆனந்தத்தையளிப்பவனும், ஸுக்ரீவனால் பூஜிக்கப்பட்டவனும், முவ்வுலகங்களையும் ரக்ஷிப்பவனும், எப்பொழுதும் ஸத்தியமான பிரதிக்ஞையுள்ளவனும், ரகுவம்சத்தில் பிறந்தவனும், அவர்களை ரக்ஷிப்பவனும், தாமரைக் கண்ணனும், ரகுவம்சத்தோருக்கும் ஈச்வரனுமாகிய ஸ்ரீராமசந்திரனை பஜிக்கின்றேன்.

भक्तप्रियं भक्तसमाधिगम्यं चिंताहरं चिंतितकामधेनुं।
सूर्येन्दुकोटिद्युतिभास्वरं तं रामं भजे राघवरामचन्द्रम्॥ *(41)*

*பக்தப்ரியம் பக்த ஸமாதிகம்யம்*
*சின்தாஹரம் சின்திதகாமதேனும்।*
*ஸூர்யேந்து கோடித்யூதிபாஸ்வரம்தம்*
*ராமம் பஜே ராகவ ராமசந்த்ரம் ॥*

பக்தர்களிடத்தில் ப்ரியமுள்ளவனும், பக்தர்களால் ஸமாதியில் அடையக்கூடியவனும், மனஸ்ஸின்

சிந்தைகளைப் போக்கக் கூடியவனும், இஷ்டார்த்தத் தைக் கொடுக்கும் காமதேனுவும், கோடி சூரிய சந்திராளின் ஒளிபோல் பிரகாசிப்பவனும், ராகவன், ராமச்சந்திரன் முதலிய பேருடையவனும் ஆகிய அந்த ஸ்ரீராமனை பஜிக்கிறேன்.

श्रीरामं जनकक्षितीश्वरसुतावक्त्राम्बुजाहारिणं
श्रीमद्भानुकुलाब्धिकौस्तुभमणिं श्रीरत्नवक्षस्स्थलम् ।
श्रीकण्ठाद्यमरौघरत्नमकुटालङ्कारपादाम्बुजं
श्रीवत्सोज्वलमिन्द्रनीलसदृशं श्रीरामचन्द्रं भजे ॥ (42)

*ஸ்ரீராம் ஜனகக்ஷிதீஸ்வரஸுதாவக்த்ராம்புஜாஹாரிணம்*
*ஸ்ரீமத்பானு குலாப்திகௌஸ்துபமணிம்*
*ஸ்ரீரத்னவக்ஷஸ்தலம்।*
*ஸ்ரீகண்டாத்யம ரௌகரத்ன மகுடாலங்காரபாதாம்புஜம்*
*ஸ்ரீவத்ஸோஜ்வலமிந்த்ர நீலஸத்ருஸம்*
*ஸ்ரீராமசந்த்ரம் பஜே॥*

லக்ஷ்மீ விலாஸத்தை உண்டு பண்ணக்கூடிய வனும், ஜானகீதேவியின் தாமரைப்பூ போன்ற முகத்தால் ஆனந்திப்பவனும், சூரிய வம்சமாகிய ஸமுத்திரத்தில் பிறந்த கௌஸ்துப மணியும், கௌஸ் துபமென்னும் ரத்னத்தை மார்பில் உடிடையவனும் (லக்ஷ்மி என்னும் ரத்னத்தை மார்பில் வைதது்க் கொண்டிருப்பவனும்), பரமேச்வரன் முதலிய தேவக் கூட்டங்களின் ரத்ன கிரீடங்களால் அலங்கரித்த பாதாரவிந்தமுடையவனும், ஸ்ரீவத்ஸமென்னும் மறுவினால் விளங்கக்கூடியவனும், இந்திர நீல சிலைக்கு ஸமான தேஹ காந்தியுடையவனுமாகிய ஸ்ரீராமசந்திரனை பஜிக்கிறேன்.

रामचन्द्र चरिताकतामृतं लक्ष्मणाग्रजगुणानुकीर्तनम्।
राघवेश तव पादसेवनं संभवन्तु मम जन्मजन्मनि।। *(43)*

*ராமசந்த்ர சரிதாகதாம்ருதம் லக்ஷ்மணாக்ரஜகுணானு*
*கீர்த்தனம்।*
*ராகவேஸ தவ பாதஸேவனம் ஸம்பவந்து மம*
*ஜன்மஜன்மனி।।*

ஸ்ரீராமசந்திரனின் சரித்திரமாகிய அமிர்தபானமும், லக்ஷ்மணனுக்கண்ணனாகிய ராமனின் குணங்களைப் பாடுதலும், ஹே ஸ்ரீ ராம! உன் பாதாரவிந்த ஸேவையும், நான் எந்தெந்த ஜன்மமெடுத்தாலும் எனக்கிதுகளிருக்க வேண்டுமே.

अज्ञानसम्भवभवाम्बुधिबाडबाग्नि रव्यक्ततत्त्वनिकरप्रणवाधिरूढः
सीतासमेतमनुजेन हृदन्तराळे प्राणप्रयाणसमये मम सन्निधत्ते।। *(44)*

*அஞானஸம்பவ பவாம்புதி பாட பாக்நி ரவ்யக்ததத்வ*
*நிகரப்ரணவாதிரூட:।*
*ஸீதாஸமேதமனுஜேன ஹ்ருதந்தராளே ப்ராணப்ர*
*யாணஸமயே மம ஸன்னிதத்தே।।*

மாயையென்னும் அஞ்ஞானத்திலிருந்துமுண்டாகிய ஸம்ஸாரமென்னும் பெருங்கடலுக்கு வடவாக்னி போன்றவனும், அவ்யக்தம் (மூலப்ரகிருதி அதவாமாயை) முதலிய தத்வங்களுக்கு மதிஷ்டானபூதனாய் ஓங்காரமென்னும் பீடத்திலேறியவனும் ஆகிய ஸ்ரீராம்பரமாத்மா, லக்ஷ்மணன் ஸீதை இவர்களுடன் கூடி ப்ராணோத்க்ரமணஸமயத்தில் என் மனதில் விளங்கட்டும்.

रामो मत्कुलदैवतं, सकरुणं रामं भजे सादरं
रामेणाखिलघोरपापनिहती, रामाय तस्मै नमः।
रामान्नास्ति जगत्त्रयैकसुलभो, रामस्य दासोऽस्म्यहं,
रामे प्रीतिरतीव मे, कुलगुरो श्रीराम रक्षस्व माम्॥ *(45)*

*ராமோ மத்குலதைவதம் ஸகருணம் ராமம் பஜே ஸாதரம்*
*ராமேணாகிலகோரபாபனிஹதீ ராமாயதஸ்மை நம:।*
*ராமான்னாஸ்தி ஜகத்ரயைகஸுலபோ ராமஸ் ய தாஸோ அஸ்ம்யஹம்*
*ராமே ப்ரீதிரதீவ மே குலகுரோ ஸ்ரீராம ரக்ஷஸ்வ மாம்॥*

ஸ்ரீராமனே எனக்கு குலதெய்வமாகிறான். கருணை புரிந்த ஸ்ரீராமனை நான் ஆதரவுடன் பஜிக்கிறேன், ஸ்ரீராமனாலேயே கோரமான ஸகலவித பாப விநாசமும் ஏற்படுகிறது. ஸ்ரீராமனுக்கு நமஸ்காரமிருக்கட்டும், இராமனைத் தவிர, முவ்வுலகங்களிலும் ஸுலபமாகிய வஸ்து வேறுதுவும் கிடையாது, நான் இராமனின் தாஸனாகிறேன், எனக்கு இராமனிடம் வெகுவான ப்ரீதியுள்ளது, குல குருவாகிய ஓ இராமா! என்னை நீ ரக்ஷிப்பாயாக.

वैदेहीसहितं सुरद्रुमतले हैमे महामण्टपे
मध्येपुष्पकमासने मणिमये वीरासने संस्थितम्।
अग्रे वाचयति प्रभञ्जनसुते तत्त्वं मुनिभ्यः परं
व्याख्यान्तं भरतादिभिः परिवृतं रामं भजे श्यामलम्॥ *(46)*

*வைதேஹீஸஹிதம் ஸுரத்ருமதலே ஹைமே மஹாமண்டபே*
*மத்யேபுஷ்பக மாஸனே மணிமயே வீராஸனே ஸம்ஸ்திதம்।*
*அக்ரே வாசயதி ப்ரபஞ்ஜனஸுதே தத்வம் முனிப்ய: பரம்*
*வ்யாக்யான்தம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே ஸ்யாமளம்॥*

ஸ்ரீஸீதா தேவியுடன் கூடியவனும், கல்பக விருக்ஷத்தின் மூலத்தில் தங்க மண்டபத்தில் புஷ்பக விமான மத்தியில் நவரத்ன மயமான சிம்ஹாஸனத்தில் உட்கார்ந்திருப்பவனும், வாயுகுமாரனாகிய ஹனுமான் முன் பக்கத்தில் படித்துக் கொண்டிருக்கையில் அதன் உண்மையான தத்வத்தை மகரிஷிகளுக்கு வெளி விடுகிறவனும், பரதன் முதலிய தம்பிமாருடன் இருப்பவனும், சியாமள வர்ணனுமாகிய ஸ்ரீராமனை பஜிக்கின்றேன்.

**वामे भूमिसुता पुरस्तु हनुमान्पश्चात्सुमित्रासुत-**
**श्शत्रुघ्नो भरतश्च पार्श्वदळयोर्वाय्वादिकोणेष्वपि ।**
**सुग्रीवश्च विभीषणश्च युवराट् तारासुतो जाम्बवान**
**मध्ये नीलसरोजकोमलरुचिं रामं भजे श्यामलम् ।।** ***(47)***

***வாமே பூமிஸுதா புரஸ்து***
***ஹனுமாந்பஸ்ச்சாத்ஸுமித்ராஸுத***
***ஸ்ஸத்ருக்நோ பரதஸ்ச்ச பார்ஸ்வதளயோர்***
***வாய்வாதி கோணே ஷ்வபி।***
***ஸுக்ரீவஸ்ச்ச விபீஷணஸ்ச்ச யுவராட் தாராஸுதோ***
***ஜாம்பவான்***
***மத்யே நீலஸரோஜகோமளருசிம் ராமம் பஜே***
***ச்யாமளம்॥***

இடது பக்கத்தில் பூமகளாகிய ஜானகியும், முன் பக்கத்தில் ஹனுமாரும், பின்பக்கத்தில் லக்ஷ்மணனும், இரண்டு பக்கங்களிலும் பரதன், ஸத்ருக்னனும், வாயவ்யம் (வடமேற்கு) முதலிய மூலைகளில் வரிசையாக ஸுக்ரீவன், விபீஷணன், இளவரசனாகிய அங்கதனும், ஜாம்பவானும் நின்றிருக்கையில், நடுமத்தியில் வீற்றிருக்கும் கருவாம்பல் நிறமுடைய ஸ்ரீராமனை பஜிக்கிறேன்.

केयूराङ्गदकङ्कणैर्मणिगणैर्वैरोचमानं सदा
राकापर्वणिचन्द्रकोटिसदृशं छत्रेण वैराजितम् ।
हेमस्तम्भसहस्रषोडशयुते मध्ये महामण्डपे
देवेशं भरतादिभिः परिवृतं रामं भजे श्यामलम् ।। (48)

*கேயூராங்கதகங்கணை் மணிகணை்*
*வைரோசமானம் ஸதா*
*ராகாபர்வணிசந்த்ர கோடி*
*ஸத்ருஸம்ச்சத்ரேணவைராஜிதம்।*
*ஹேமஸ்தம்ப ஸஹஸ்ரஷோடஸயுதே மத்யே*
*மஹாமண்டபே*
*தேவேஸம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே*
*ஸ்யாமளம்॥*

தோள்வளை கங்கணங்களாலும் மற்றும் ரத்ன கணங்களாலும் எப்பொழுதும் சோபிக்கக்கூடியவனும், கோடிக் கணக்கான பௌர்ணமீ சந்திரர்களுக்கொப்பா னவனும், வெள்ளிக்குடையால் சோபிப்பவனும், பதினாறாயிரம் தங்கக் கம்பங்களுடைய மஹா மண்டபத் தின் மத்தியில் இருப்பவனும், ஸகலதேவாளுக்கும் ஈசனும், ஸுந்தராங்கனும், பரதாதிகளால் சூழப் பட்டவனுமாகிய இராமனை நான் பஜிக்கிறேன்.

साकेते शरदिन्दुकुन्दधवळे सौघे महामण्टपे
पर्यस्तागरुधूपधूमपटले कर्पूरदीपोज्वले ।
सुग्रीवाङ्गदवायुपुत्रसहितं सोमित्रिणा सेवितं
लीलामनुषविग्रहं रघुपतिं रामं भजे श्यामलम् ।। (50)

*ஸாகேதே ஸரதிந்துகுந்தகவளே ஸௌகே மஹாமண்டபே*
*பர்யஸ்தாகருதூபதூமபடலே கர்பூரதீபோஜ்ஜ்வலே।*
*ஸுக்ரீவாங்கதவாயுபுத்ரஸஹிதம் ஸௌமித்ரிணா*
*ஸேவிதம்*
*லீலாமானுஷவிக்ரஹம் ரகுபதிம் ராமம் பஜே ஸ்யாமளம்॥*

அயோத்யா நகரில் சரத் காலத்து சந்திரன், முல்லைப்பூ இதுகள் போல வெளுப்பு நிறமான மேடையில் நவரத்ன மயமாய், அகில் கட்டையின் புகையானது எங்கும் வியாபித்து, கற்பூர தீபங்களால் சோபிக்கும் மஹாமண்டபத்தில், சுக்ரீவன், அங்கதன், வாயுபுத்திரன் முதலியவர்களுடன் கூடி, லக்ஷ்மணனால் ஸேவிக்கப்படும், விளையாட்டுக்காகவே மாயா மானுட வேஷம் பூண்ட சியாமளாங்கனாகிய ரகுபதிராமனை பஜிக்கிறேன்.

शान्तं शारदचन्द्रकोटिसदृशं चन्द्राभिरामाननं
चन्द्रार्काग्निविकासिकुण्डलधरं चन्द्रावतंसस्तुतम् ।
वीणापुस्तकसाक्षसूत्रविलसव्द्याख्यानमुद्राकरं
देवेशं भरतादिभिः परिवृतं रामं भजे श्यामलम् ।। (50)

*ஸாந்தம் ஸாரதசந்த்ரகோடிஸத்ருஸம் சந்த்ராபிராமானனம்*
*சந்த்ரார்காக்நி விகாஸிகுண்டலதரம் சந்த்ராவதம்ஸஸ்துதம்।*
*வீணாபுஸ்தகஸாக்ஷஸூத்ரவிலஸவ்த்யாக்யான முத்ராகரம்*
*தேவேஸம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே ஸ்யாமளம்॥*

சாந்தஸ்வரூபமாயும், சரத்காலத்தில் விளங்கும் கோடி சந்திராளுக்கு ஸமனாயும், சந்திரன் போலழகான முகமுடையவனாயும், சந்திரன், சூரியன் அக்னிகளைப் போல் சோபிக்கும் குண்டலமுடையவனாயும், சந்திரசேகரனாகிய பரமேச்வரனாலும் துதிக்கப்பட்ட வனாயும், (நாலு கரங்களாலும்) வீணை, புஸ்தகம், அக்ஷமாலை, வியாக்யான முத்ரை (ஞான முத்திரை) இவைகளை தரிப்பவனும், பரதாதிகளால் சூழப்பட்டவனும், சியாமளவர்ணனும், தேவர்களுக்கு ஈசனுமாகிய ஸ்ரீராமனை பஜிக்கிறேன்.

रामं राक्षसमर्दनं रघुपतिं शक्रारिविध्वंसिनं
सुग्रीवेप्सितराज्यदं सुरपतेः पुत्रान्तकं शार्ङ्गिणम् ।
भक्तानामभयप्रदं भयहरं पापौघविध्वंसिनं
सीतासेवितपादपद्मयुगळं रामं भजे श्यामलम् ।। *(51)*

*ராமம் ராக்ஷஸமர்தனம் ரகுபதிம் ஸக்ராரிவித்வம்ஸினம்*
*ஸுக்ரிவேப்ஸிதராஜ்யதம் ஸுரபதே: புத்ராந்தகம் ஸார்ங்கிணம்।*
*பக்தானாம் அபயப்ரதம் பயஹரம் பாபௌகவித்வம்ஸினம்*
*ஸீதாஸேவிதபாத பத்மயுகளம் ராமம் பஜே ஸ்யாமளம்।।*

ஆனந்தத்தைத் தருகிறவனும், அரக்கர்களை யழித்தவனும், ரகுவம்சம்தோருக்கு அதிபதியும், இந்திரனின் சத்துருக்களான அசுரர்களை த்வம்சம் செய்தவனும், சுக்ரீவனுக்கு இஷ்டமான ராஜ்யத்தை அளித்தவனும், இந்திர புத்திரனாகிய ஜயந்தனுக்கு யமன் போல் பயத்தைக் கொடுத்தவனும், சார்ங்கமென்னும் பெயருள்ள தனுஸ்ஸை தரித்தவனும், பக்தர்களுக்கு அபயமளிப்பவனும், ஸம்ஸாரபயத்தை அகற்றுகிறவனும், பாபக்கூட்டங்களை நாசம் செய்பவனும், ஸீதையால் ஸேவிக்கப்பட்ட பாதாரவிந்தமுடையவனுமாகிய சியாமளனான ஸ்ரீராமனை நான் பஜிக்கின்றேன்.



कन्दर्पायुतकोटिकोटितुलितं कालाम्बुदश्यामलं
कम्बुग्रीवमुदारकौस्तुभधरं कर्णावतंसोत्पलम् ।
कस्तूरीतिलकोज्ज्वलं स्मितमुखं चिन्मुद्रयालङ्कृतं
सीतालक्ष्मणवायुपुत्रसहितं सिंहासनस्थं भजे ।। *(52)*

*கந்தர்பாயுதகோடி கோடி துலிதம் காலாம்புதஸ்யாமளம்*
*கம்புக்ரீவ முதாரகௌஸ்துபதரம் கர்ணாவதம் ஸோத்பலம்।*
*கஸ்தூரீதிலகோஜ்ஜ்வலம் ஸ்மிதமுகம்*
*சிந்முத்ரயாலங்க்ருதம்*
*ஸீதாலக்ஷ்மண வாயுபுத்ரஸஹிதம்*
*ஸிம்ஹாஸனஸ்தம் பஜே॥*

கோடி கோடி மன்மதாளுக்குச் சமானமானவனும், கார்மேகம் போன்ற வர்ணமுடையவனும், சங்கு போன்ற கழுத்தையுடையவனும், உத்தமமான கௌஸ்துப மணிந்தவனும், ஆம்பல் பூவை காதுக்கலங்காரமா யுடையவனும், கஸ்தூரிப் பொட்டு தரித்தவனும், புன்னகை பூண்ட முகமுடையவனும், ஞானமுத் திரையை தரித்தவனும், சிம்ஹாஸனத்தில் வீற்றிருப்ப வனும், ஸீதா லக்ஷ்மண வாயு குமாரர்களுடன் கூடியவனுமாகிய ஸ்ரீராமனை ஸேவிக்கிறேன்.

साकेते नवरत्नपंक्तिखचिते चित्रध्वजालङ्कृते
वासे, स्वर्णमये दळाष्टललिते पद्मे विमानोत्तमे ।
आसीनं भरतादिसोदरजनैः शाखामृगैः किन्नरैः
दिक्पालैर्मुनिपुङ्गवैर्नृपगणैस्संसेव्यमानं भजे ।। *(53)*

*ஸாகேதே நவரத்ன பங்க்திகசிதே சித்ரத்வஜாலங்க்ருதே*
*வாஸே ஸ்வர்ணமயே தளாஷ்டலலிதே பத்மே*
*விமானோத்தமே।*
*ஆஸீனம் பரதாதிஸோதரஜனை: ஸாகாம்ருகை: கின்னரை:*
*திக்பாலைர் முனிபுங்கவைர்ந்ருபகணைஸ்ஸம்*
*ஸேவ்யமானம் பஜே॥*

அயோத்தியா நகரத்தில் நவரத்ன வரிசைகளா லிழைக்கப்பட்ட, விசித்ரமான கொடிகளால் அலங்கரிக் கப்பட்ட க்ருஹத்தில், புஷ்பக விமான மத்தியில் தங்கமயமான எட்டு தளங்களுடன் கூடின தாமரைப் பூவின் மத்தியில் உட்கார்ந்திருப்பவனும், பரதன் முதலிய தம்பிமார்களாலும், சுக்ரீவாதி வானரங்களாலும், கின்னரரென்னும் கந்தர்வ ஜாதிகளாலும், இந்திராதி திக்பாலர்களாலும், முனிச்ரேஷ்டர் களாலும், அனேக ராஜ கணங்களாலும் ஸேவிக்கப்படக் கூடிய ஸ்ரீராமனை பஜிக்கிறேன்.

कस्तूरीघनसारकुङ्कुमलसच्छ्रीचन्दनालङ्कृतं
कन्दर्पाधिकसुन्दरं घननिभं काकुत्स्थवंशध्वजम् ।
कल्याणांभरवेष्टितं कमलया युक्तं कलावल्लभं
कल्याणाचलकार्मुकप्रियसखं कल्याणरामं भजे ।। (54)

*கஸ்தூரீகனஸாரகுங்குமலஸச்ச்ரீசந்தனாலங்க்ருதம்*
*கந்தர்பாதிக ஸுந்தரம்கனனிபம்காகுத்ஸ்தவம்ஸத்வஜம்।*
*கல்யாணாம் பரவேஷ்டிதம் கமலயா யுக்தம் கலாவல்லபம்*
*கல்யாணாசலகார்முகப்ரியஸகம் கல்யாணராமம் பஜே॥*

கஸ்தூரி, பச்சக்கற்பூரம், குங்குமப்பூ இதுகள் கலந்த ஸ்ரீசந்தனப்பூச்சினால் சோபிப்பவனும், மன்மதனைவிட அதிக சுந்திரனும், மேகச்யாமளனும், ககுத்ஸ்த மஹாராஜாவின் வம்சத்திற்கு கொடி போலலங்கார மானவனும், மங்களகரமான பீதாம்பரம் தரித்தவனும், லக்ஷ்மீ ஸ்வரூபியான ஸீதையுடன் கூடியவனும், ஸகலகலைகளுக்கும் வல்லவனும், மகாமேருவை வில்லாகக் கொண்ட பரமசிவத்துப் பெருந்தோழனும் ஆகிய கல்யாணராமனை பஜிக்கிறேன்.

मुक्तेर्मूलं मुनिवरहृदानन्दकन्दं मुकुन्दं
कूटस्थाख्यं सकलवरदं सर्वचैतन्यरूपम्
नादातीतं कमलनिलयं नादनादान्ततत्त्वं
नादातीतं प्रकृतिरहितं रामचन्द्रं भजेऽहम् ।। *(55)*

***முக்தேர் மூலம் முனிவரஹ்ருதானந்தகந்தம் முகுந்தம்***
***கூடஸ்தாக்யம் ஸகலவரதம் ஸர்வசைதன்ய ரூபம்।***
***நாதாதீதம் கமலநிலயம் நாத நாதாந்த தத்வம்***
***நாதாதீதம் ப்ரக்ருதி ரஹிதம் ராமசந்த்ரம் பஜேऽஹம்॥***

முக்தியைக் கொடுப்பதில் மோக்ஷத்துக்கு மூல பூதனும், மகாமுனிகளுடைய ஹ்ருதயத்திலிருக்கும் ஆனந்தக்கிழங்காயும், (முக்திம்-ததாதி=முகுந்த:) முக்தியைக் கொடுப்பவனும், (கூடம் = கம்மாள னிடமிருக்கும் பெரிய இரும்புக் கட்டை) அதுபோல் இருப்பவன். (எவ்வளவு செம்மட்டியாலடித்தாலும் தேயாமல் இருப்பது கூடம்) நிற்விகாரமாயிருப்பவனும், அதவா மாயைக்கு அதிஷ்டான பூதனும், ஸகல வரங்களையுமளிப் பவனும், ஸகல ஜீவஸ்வரூபனும், சப்த மயமான வேதத்துக்கு மெட்டாதவனும், ஹ்ருதய கமலத்திலேயே குடியிருப் பவனும், நாதம் - நாதாந்தம் - ஸமனா - உன்மனா - முதலிய தத்வஸ்வரூபனும் ஓங்காரத்தின் கடைசியில் தோன்றும் சூக்ஷ்மமான நாதத் தையும் மீறி அதி சூக்ஷ்ம மாயிருப்பவனும், தனக்கொரு காரணமில்லாதவனும் ஆகிய ஸ்ரீராம சந்திரனை நான் பூஜிக்கிறேன்.



ताराकारं निखिलनिलयं तत्त्वमस्यादिलक्ष्यं
शब्दावाच्यं त्रिगुणरहितं व्योममङ्गुष्ठमात्रम् ।
निर्वाणाख्यं सगुणमगुण् व्योमरन्ध्रान्तरस्थं
सौषुम्नांतःप्रणवसहितं रामचन्द्रं भजेऽहम् ।। (56)

*தாராகாரம் நிகிலநிலயம் தத்வமஸ்யாதிலக்ஷ்யம்*
*ஸப்தாவாச்யம் த்ரிகுணரஹிதம் வ்யோமமங்குஷ்டமாத்ரம்।*
*நிர்வாணாக்யம் ஸகுணமகுணம் வ்யோமரந்த்ரான்தரஸ்தம்*
*ஸௌஷும்நாம்த: ப்ரணவஸஹிதம் ராமச்சந்த்ரம்*
*பஜே<sup>5</sup>ஹம்॥*

நக்ஷத்திரம் போன்ற ஒளியையுடையவனும், அதவஸம் ஸாரத்திலிருந்தும் பக்தாளை தாண்டச் செய்யும் ஆகாரம் = உருமுடையவனும், அதவா தாரம் = ப்ரணவம் = ஓம் காரத்திற்கு வாச்யமாயும், ஓங்கார சொரூபனாயிருப்பவனும், ஸகல ப்ரபஞ்சத்திற்கும் ஆச்ரய பூதனும் ''தத்த்வம் அஸி'' முதலான வேதாந்த மஹாவாக்யங்களாலும் கூட (விட்டுவிடா லக்ஷணை என்ற ப்ரகாரமாக) லக்ஷணயாக தெரியப்படுத்தப் படுகிறவனும் ஆகையினாலேயே யாதொரு ஸப்தங் களுக்கும் வாச்யமல்லா தவனும் (எட்டாதவனும்) ஸத்வம்-ரஜஸ்-தமஸ் என்ற முக்குணமற்றவனும், கட்டைவிரல் பிரமாணமான ஹ்ருதய கமலத்தி லிருக்கும் சிதாகாசரூபனும், மோஷஸ்வரூபனும், மாயா சக்தியால் குணமுடையவனாய்த் தோன்றுகிறவனும், நிஜமாய் குணங்களற்றவனும், பிரம்மாந்திர மத்தியிலிருப்பவனும், ஸுஷும்னையென்னும் நாடியினுள்ளில் ஓங்காரத்துடன் தியானிக்கப்பட்ட வனும் ஆகிய ஸ்ரீராம சந்திரனை நான் பஜிக்கிறேன்.

ஸூக்ஷ்ம சப்தங்களைத் தாண்டிய துரிய சிவமூர்த்தி யுமாகிய ரகுவம்ச ரத்னத்தை பஜிக்கிறேன்.

**नादं नादविनीलचित्तपवनं नादान्ततत्त्वप्रियं**
**नामाकारविवर्जितं नवघनश्यामाङ्गनादप्रियम् ।**
**नादाम्भोजमरन्दमत्तविलसद्भृङ्गं मदन्तस्स्थितं**
**नादान्तध्रुवमण्डलाब्जरुचिरं रामं भजे तारकम् ।।** ***(122)***

***நாதம் நாதவினீலச் சித்தபவனம் நாதான்ததத்வப்ரியம்***
***நாமாகார விவர்ஜிதம் நவகனஸ்யாமாங்க நாதப்ரியம்।***
***நாதாம் போஜமரந்தமத்தவிலஸத்ப்ருங்கம் மதந்தஸ்ஸ்திதம்***
***நாதாந்த த்ருவமண்டலாப்ஜருசிரம் ராமம் பஜே தாரகம்॥***

நாத ப்ரம்ம ஸ்வரூபனும், நாதத்தில் லயித்த மனஸு பிராணன் இதுகளையுடையவனும், நாதாந்தமென்னும் தத்வத்தில் மிகப்ரியமுள்ளவனும், பெயர் உருவமிது களற்றவனும், புதிய நீலமேகம் போன்ற தேஹ முடையவனும், நாதத்தில் பிரியமுடையவனும், அனாஹத சப்தத்துடன் கூடிய ஹ்ருதயகமலத்தி லிருக்கும் தேனைக்குடித்து மதித்து சந்தோஷமடைந்த வண்டாயிருப்பவனும், (நாதப்ரம்மானு ஸந்தானம் செய்யும் யோகிகளின் ஹ்ருதயகமலத்தில், வண்டு தாமரைப்பூவிலிருந்து தேனுண்டு மதமடைவதுபோல் ஆனந்தத்துடன் ப்ரஸன்னமாகிறவன் என்ற பொருள்) என்னுள்ளிருப்பவனும், நாதத்தின் நுனியில் த்ருவ மண்டல மாகிய சிரஸ்ஸிலிருக்கும் ஸஹஸ்ரதள கமலத்திலிருப்பவனும், தாரகப்பிரம்மரூபனும் (ப்ரணவ ஸ்வரூபனும்) ஆகிய ஸ்ரீராமனை பஜிக்கிறேன்.

नानाभूतहृदब्जपद्मनिलयं नामोज्ज्वलाभूषणं
नामस्तोत्रपवित्रितत्रिभुवनं नाराणाष्टाक्षरम्।
नादांतेंदुगळत्सुधाप्लुततनुं नानात्मचिन्मात्रकं
नानाकोटियुगांतभानुसदृशं रामं भजे तारकम्।। (123)

*நானாபூதஹ்ருதப் ஜபத்மநிலயம் நாமோஜ்ஜ்வலாபூஷணம்*
*நாமஸ்தோத்ரபவித்ரிதத்ரிபுவனம் நாராயணாஷ்டாக்ஷரம்।*
*நாதாம்தேம்துகளத்ஸுதாப்லுததனும் நாநாத்மசின்மாத்ரகம்*
*நானாகோடியுகாம்த பானுஸத்ருஸம் ராமம் பஜே தாரகம்।।*

நானாவகையான பிராணிகளின் ஹ்ருதயகமலத்தில் அந்தர்யாமியாக (ஸாக்ஷியாக) வீற்றிருப்பவனும், ராமன் - ராமசந்தரன் - ராமபத்ரன் - ரகுநாதன் முதலிய நாம தேயங்களே ஆபரணமாயுள்ளவனும், தன் பெயருடன் கூடிய ஸ்தோத்திரத்தைப் படிப்பதினால் பரிசுத்தி செய்யப்பட்ட முவ்வுலகங்களை உடைய வனும், நாராயணாஷ்டாக்ஷரீ மந்திரத்தில் விளங்கு பவனும், நாதாந்தத்தில் இருக்கும் ஆயிரமிதள் தாமரைப்பூவி னின்றும் பெருகும் அமிர்தத்தால் அபிஷிக்தனும், நானாவித சேதனஸ்வரூபனும், கோடிக் கணக்கான ப்ரளயகாலத்து சூரியன்களுக்கொப்பான வனும், ஓங்கார ஸ்வரூபனும், மோக்ஷத்தைக் கொடுக்கும் தாரக (ராம) மந்திர ஸ்வரூபனுமாகிய ஸ்ரீராமனை பஜிக்கின்றேன்.

वेद्यं वेदगुरुं विरिञ्चिजनकं वेदान्तमूर्तिं स्फुर-
द्वेदं वेदकलापमूलमहिमाधारान्तकन्दाङ्कुरम्।
वेदश्रृङ्गसमानशेषशयनं वेदान्तवेद्यात्मकं
वेदाराधितपादपङ्कजमहं रामं भजे तारकम्।। (124)

*வேத்யம் வேதகுரும் விரிஞ்சிஜனகம் வேதாந்தமூர்திம் ஸ்புர-*
*த்வேதம் வேதகலாபமூலமஹிமாதாராந்தகந்தாங்குரம்।*
*வேதஸ்ருங்க ஸமானஸேஷஸயனம்*
*வேதேந்தவேத்யாத்மகம்*
*வேதாராதித பாதபங்கஜமஹம் ராமம் பஜே தாரகம்।।*

ஸர்வர்களாலும் அறியத் தகுந்த வஸ்துவும், வேதத்திற்கு குருவாயும், பிரம்மாவுக்கும் பிதாவாயும், வேதாந்தங்களால் தெளிவாக்கப்பட்ட மூர்த்தியாயும், வேதங்களை ப்ரகாசிக்கச் செய்தவனும், வேதங்களுக் கெல்லாம் ஆதாரமாகிய மஹாஸ்தம்பத்தின் மூலக் கிழங்கு போன்றதும், வேத பர்வத சிகரம் போன்ற ஆதிசேஷனில் பள்ளிகொண்டவனும், உபநிஷத்துக் களால் அறியவேண்டும் சொரூபமுடையவனும், வேதங்களால் துதிக்கப்பட்ட பாதகமலமுடையவனு மாகிய தாரக ராமனை பஜிக்கிறேன்.

मज्जीवं मदनुग्रहं मदधिपं मद्भावनं मत्सुखं
मत्तातं मम सद्गुरुं मम वरं मोहान्धविच्छेदनम् ।
मत्पुण्यं मदनेकबांधवजनं मज्जीवनं मन्निधिं
मत्सिद्धिं मम सर्वकर्मसुकृतं रामं भजे तारकम् ।। (125)

*மஜ்ஜீவம் மதனுக்ரஹம் மததிபம் மத்பாவனம் மத்ஸுகம்*
*மத்தாதம் மம ஸத்குரும் மம வரம் மோஹாந்த விச்சேதனம்।*
*மத்புண்யம் மதனேகபாம்தவஜனம் மஜ்ஜீவனம் மந்நிதிம்*
*மத்ஸித்திம் மம ஸர்வகர்மஸுக்ருதம் ராமம் பஜே தாரகம்॥*

எனது பிராணனாயிருப்பவனும், என்னை அனுக்கிரகிப்ப வனும், எனக்கதிபனும், என்னை நினைக்கக் கூடியவனும், எனக்கு ஸுகம் தருகிறவனும், என் பிதாவும், எனது (ஸத்குருவும்) மோஹாந்தகாரத்தை நசிப்பிக்கின்ற உத்தமரான ஸத்குருவும், என் புண்ய பரிபாகமும், என் பந்து ஜனமும், என் ஜீவன ஸாதனமும், எனக்குப் பெருநிதியும், எனது ஸித்தியும், எனது ஸகல கர்மாக்களால் உண்டான புண்ய மூர்த்தியும் ஆகிய தாரக ராமனை பஜிக்கிறேன்.

नित्यं नीरजलोचनं निरुपमं नीवारशूकोपमं
निर्भेदानुभवं निरन्तरगुणं नीलाङ्गरागोज्ज्वलम्।
निष्पापं निगमागमार्चितपदं नित्यात्मकं निर्मलं
निष्पुण्यं निखिलं निरञ्जनपदं रामं भजे तारकम्।। *(126)*

*நித்யம் நீரஜலோசனம் நிருபமம் நீவாரஸூகோபமம்*
*நிர்பேதானுபவம் நிரந்தரகுணம் நீலாங்கராரோஜ்ஜ்வலம்।*
*நிஷ்பாபம் நிகமாகமார்ச்சிதபதம் நித்யாத்மகம் நிர்மலம்*
*நிஷ்புண்யம் நிகிலம் நிரஞ்சனபதம் ராமம் பஜே தாரகம்।।*

முக்காலங்களிலும் அழிவற்ற வஸ்துவும், தாமரைக் கண்ணனும், ஒப்பற்றவனும், நீவாரமென்னும் ஒரு வகை நெல்லின் நுனிபோல் அதிஸூஷ்ம வஸ்துவும், பேத பாவனையற்றவனும், அளவற்ற குணமுள்ள வனும், நீலமான தேஹகாந்தியுடையவனும், பாபங் களற்றவனும், வேத சாஸ்திரங்களால் துதிக்கப்பட்ட வனும், நித்ய வஸ்துவான பரமாத்ம ஸ்வரூபனும், மாயாமலமற்றவனும், புண்யமற்றவனும், நிகில ஸ்வரூபனும், நிற்துஷ்டமான பரமபதஸொரூபனும் ஆகிய தாரக ராமனை பஜிக்கிறேன்.

ध्याये त्वां हृदयांबुजे रघुपतिं विज्ञानदीपांकुरं
हंसोहंसपरंपरादिमहिमाधारं जगन्मोहनम्।
हस्तांभोजगदाब्जचक्रमतुलं पीतांबरं कौस्तुभं
श्रीवत्सं पुरुषोत्तमं मणिनिभं रामं भजे तारकम्।। *(127)*

*த்யாயே த்வாம் ஹ்ருதயாம்புஜே ரகுபதிம்*
*விஞானதீபாம்குரம்*
*ஹம்ஸோஹம்ஸ பரம்பராதி மஹிமாதாரம் ஜகன்*
*மோஹனம்।*
*ஹஸ்தாம் போஜகதாப்ஜசக்ரமதுலம் பீதாம்பரம்*
*கௌஸ்துபம்*
*ஸ்ரீவத்ஸம் புருஷோத்தமம் மணிநிபம் ராமம் பஜே தாரகம்।।*

ரகுபதியாய் ஜ்ஞான தீபத்தின் முளை போன்றவனாய் ஹம்ஸ ஹம்ஸ என்ற ச்வாஸ பரம்பரையாகிய அஜபா ஹம்ஸ மந்திரத்தின் மகிமைக்கு ஆதாரமாயும், உலகங்களை மோகிக்கச் செய்பவனும், மிருதுவான கைகளில் சங்கு-சக்ரம்-தாமரைப்பூ-கதை இதுகளை ஏந்தியவனும், அதுல்யனும், பீதாம்பரதாரியும், கௌஸ்துப மணியுடையவனும், ஸ்ரீவத்ஸமென்னும் மச்சமுள்ளவனும், புருஷோத்தமனும், இந்த்ரநீல மணி போன்றவனுமாகிய தாரக ராமனை மனதில் த்யானம் செய்கிறேன் - பஜிக்கிறேன்.

**सत्यज्ञानमनन्तमच्युतमजं चाव्याकृतं तत्परं**
**कूटस्थादिसमस्तसाक्षिमनघं साक्षाद्विराट्तत्त्वदम् ।**
**वेद्यं विश्वमयं स्वलीनभुवनस्वाराज्यसौख्यप्रदं**
**पूर्णं पूर्णतरं पुराणपुरुषं रामं भजे तारकम् ॥** ***(128)***

***ஸத்ய ஞானமனந்த மச்யுதமஜம் சாவ்யாக்ருதம் தத்பரம்***
***கூடஸ்தாதி ஸமஸ்த ஸாக்ஷிமனகம் ஸாக்ஷாத் விராட்தத்வதம்।***
***வேத்யம் விஸ்வமயம் ஸ்வலீனபுவனஸ்வாராஜ்ய ஸௌக்யப்ரதம்***
***பூர்ணம் பூர்ணதரம் புராணபுருஷம் ராமம் பஜே தாரகம்॥***

உண்மையான வஸ்துவாய், ஞானரூபமாய், நாசமற்றதாய், மாறுதலில்லாததாய், ஜன்ம ரஹிதமாய் இருப்பதும், ஸ்தூலம்-சூக்ஷ்மமாயும் அதவா ஸ்தூல ப்ரபஞ்சத்துக்குக் காரணமாகிய மாயாசக்தியுடையவனும், அந்த மாயையைவிட மேலாகி ஸ்வதந்திரனாயிருப்பவனும், மாயை முதலிய ஸமஸ்திவஸ்துக்களுக்கும் ஸாக்ஷிபூதனும், தோஷமற்றவனும் (சந்திரனின் பிரகாசத்தினால் கண்ணுக்குத் தெரியக்கூடிய ராஹு சந்திரனை மூடுவது போல், ஆத்மஜ்யோதியால்

இருக்கென்றறிந்து கொள்ள வேண்டிய மாயை அந்த ஆத்மஸ்வரூபத்தை மறைக்கிறது. பகவான் அதற்கும் ஸாக்ஷியாக இருக்கிறார்) விராட்தத்வஸ்வரூபனும், அறியவேண்டியவனும், ஸர்வ ப்ரபஞ்சஸ்வரூபனும், அதவா ஓங்காரஸ்வரூபனும், அதவா ஜாக்ரதவஸ்தையில் விவகரிக்கும் ஜீவஸ்வரூபனும், ஸகல உலகங்களையும் பேதபாவனை களையும் தன்னுள் அடக்கி ஆத்ம ஞானத்துடனிருப்பவருக்கு மஹாஸாம்ராஜ்ய ஸௌக்கியத்தை மோக்ஷஸுகத்தை அளிப்பவனும், எங்கும் நிறைந்த புராண புருஷனும் ஆகிய ஸ்ரீதாரக ராமனை பஜிக்கிறேன்.

**रामं राक्षसवंशनाशनकरं राकेन्दुबिंबाननं**
**रक्षोरिं रघुवंशवर्धनकरं रक्ताधरं राघवम् ।**
**राधायात्मनिवासिनं रमा विनिभं रम्यं रामनायकं**
**रन्ध्रान्तर्गतशेषशायिनमहं रामं भजे तारकम् ।।** ***(129)***

***ராமம் ராக்ஷஸ வம்ஸநாஸனகரம் ராகேந்துபிம்பானனம்***
***ரக்ஷோரிம் ரகுவம்ஸவர்தனகரம் ரக்தாதரம் ராகவம்।***
***ராதாயாத்மனிவாஸினம் ரவினிபம் ரம்யம் ரமாநாயகம்***
***ரன்த்ரான் தர்கதஸேஷஸாயிநமஹம் ராகம் பஜே தாரகம்॥***

ஸுந்தராங்கனும், ராக்ஷஸ வம்சத்தையழித்தவனும், பூர்ணசந்திரன் போன்ற முகமுடையவனும், ராக்ஷஸ சத்ருவும், ரகுவின் குலத்தை விளங்கச்செய்தவனும், சிவந்த உதட்டையுடையவனும், ரகுபுத்ரனும், ராதா தேவியின் மனதில் வஸிப்பவனும், ஸூர்யன் போல் விளங்குகிறவனும், மனோஹரனும், லக்ஷ்மீபதியும், பிரம்மரந்திரத்திலும் சேஷசாயியாய் விளங்குகிறவனுமாகிய தாரக ராமனை பஜிக்கிறேன்.

ओतप्रोतसमस्तवस्तुनिचयं ओंकारबीजाक्षरं
ओंकारप्रकृतिं षडक्षरहितं ओंकारकन्दांकुरम्।
ओंकारस्फुटभूर्भुवस्सुपरितं ओघत्रयाराधितं
ओंकारोज्ज्वलसिंहपीठनिलयं रामं भजे तारकम्॥ *(130)*

ஓதப்ரோத ஸமஸ்தவஸ்துநிசயம் ஓம்காரபீஜாக்ஷரம்
ஓம்காரப்ரக்ருதிம் ஷடக்ஷரஹிதம் ஓம்காரகந்தாம்குரம்।
ஓம்காரஸ்புடபூர்புவஸ்ஸுபரிதம் ஓகத்ரயாராதிதம்
ஓம்காரோஜ்ஜ்லஸிம்ஹபீடநிலயம் ராமம் பஜே தாரகம்॥

குறுக்கும் நெடுக்குமாய் நூல் சேர்ந்திருப்பதுபோல் ஒன்றுக்கொன்று மிச்ரமாயிருக்கும் ஸகலவஸ்து ஸமூஹாத்மனும், ஓம்காரமென்னும் பீஜாக்ஷர ஸ்வரூபனும், ஓம்காரமே ஸாதகமாயுள்ளவனும், ஸ்ரீராம ஷடாக்ஷரீ மந்திரத்தில் அமைந்திருப்பவனும், ஓம்காரமாகும் விதையின் முளை போன்றவனும், ஓம்காரமாகும் சப்த ப்ரம்மத்திலிருந்து உண்டாகிய பூராதிலோகங்களால் சூழப்பட்டவனும், மூன்று கூட்டங் களாக இருக்கும் குருநாதர்களால் ஆராதிக்கப் பட்ட வனும், ஓங்காரமாகிய சிங்காசனத்தில் வீற்றிருப்பவனு மாகிய தாரக ப்ரம்ம ரூபியான ராமனை பஜிக்கிறேன்.

साकेते नगरे समस्तसुखदे हर्म्येऽब्जकोटिद्युते
नक्षत्रग्रहपंक्तिलग्नशिखरे चान्तर्यपङ्केरुहे।
वाल्मीकात्रिपराशरादिमुनिभिस्संसेव्यमानं स्थितं
सीतालङ्कृतवामभागमनिशं रामं भजे तारकम्॥ *(131)*

ஸாகேதே நகரே ஸமஸ்தஸுகதே ஹர்ம்யே
அப்ஜகோடித்யுதே
நக்ஷத்ரக்ரஹ பம்க்திலக்னஸிகரே சாந்தர்ய பங்கேருஹே।
வால்மீகாத்ரி ப்ராஸராதி முனிபிஸ்ஸம் ஸேவ்யமானம்
ஸ்திதம்
ஸீதாலங்க்ருத வாமபாகமனிஸம் ராமம் பஜே தாரகம்॥

ஸகலவிதமான ஸுகங்களையும் கொடுக்கக்கூடிய தான ஸாகேதமென்னும் அயோத்யா நகரில் நக்ஷத்ரமண்டலம்-க்ரக மண்டலம் இவைகளைத் தொடக்கூடிய சிகரமுடைய கோடி சந்திரன் போல் குளிர்ச்சியாயும், பிரகாசமாயுமிருக்கின்ற அரண்மனை யில் மத்தியத்திலிருக்கும் தாமரைப்பூ போன்ற ஆஸனத்தில் வீற்றிருக்கின்றவனும், வால்மீகி-அத்ரி-பராசரர் முதலிய முனிவர்களால் ஸேவிக்கப்படுகின்ற வனும், இடது பக்கத்தில் ஸீதா தேவியால் அலங்கரித்திருப்பவனுமாகிய ஸ்ரீதாரக ராமனை அனைபொழுதும் பஜிக்கின்றேன்.

वैकुण्ठे नगरे सुरद्रुमतले चानन्दवप्रान्तरे
    नानारत्नविनिर्मितस्फुटपटुप्राकारसंवेष्टिते ।
सौधेन्दूपलशेषतल्पललिते नीलोत्पलच्छादिते
    पर्यङ्के शयनं रमादिसहितं रामं भजे तारकम् ।।    *(132)*

*வைகுண்டே நகரே ஸுரத்ருமதலே சாணந்தவப்ரான்தரே*
*நாநாரத்னவினிர் மிதஸ்புட படுப்ராகாரஸம் ஸேவிஷ்டிதே।*
*ஸௌதேந்துபலஸேஷதல்பலலிதே நீலோத்பலச்ச்சாதிதே*
*பர்யங்கே ஸயனம் ரமாதிஸஹிதம் ராமம் பஜே தாரகம்॥*

வைகுண்ட நகரத்தில் ஆனந்த மயமான கோட்டைக்குள்ளிருக்கின்ற, நாநாரத்னங்களால் நிர்மித்த த்ருடமான வேறு கோட்டைகளால் சுற்றப்பட்ட கல்ப விருக்ஷ உத்யானத்தில், அமிர்தமொழுகுகின்ற சந்திரகாந்த கல்லுகளாகின்ற ஆதிசேஷ படுக்கையினால் சோபிக்கின்ற, நீலோத்பலங்களால் அலங்கரித்த கட்டிலில் லக்ஷ்மிதேவி (சீதாதேவி)யுடன் கூடியிருக்கும் ஸ்ரீதாரகராமனை பஜிக்கிறேன்.

वन्दे राममनादिपूरुषमजं वन्दे रमानायकं
वन्दे हारकिरीटकुण्डलधरं वन्दे सुनीलद्युतिम् ।
वन्दे चापकलंबकोज्ज्वलकरं वन्दे जगन्मङ्गळं
वन्दे पंक्तिरथात्मजं मम गुरुं वन्दे सदा राघवम् ।। *(133)*

வந்தே ராமமனாதிபூருஷமஜம் வந்தே ரமானாயகம்
வந்தே ஹாரகிரீடகுண்டலதரம் வந்தே ஸுனீலத்யுதிம்।
வந்தே சாபகலம்பகோஜ்ஜ்வலகரம் வந்தே ஜகன்மங்களம்
வந்தே பம்க்திரதாத்மஜம் மம குரும் வந்தே ஸதாராகவம்॥

ஆதியந்தமற்ற பரமபுருஷனாகிய இராமனை வணங்கு கிறேன். லக்ஷ்மீபதியாகிய ஸ்ரீராமனை வந்திக்கிறேன். முத்துமாலை-கிரீடம்-குண்டலங்களிவையணிந்த பரமனை வந்தே, நீலநிறமான மேனியுடையவனை வந்தே, வில்லை யுடைய, முழங்கால் வரையில் தொங்குகின்ற கைகளால் சோபிக்கின்றவனை வணங்குகிறேன். ஜகத்துக்கு மங்களகரனா கியவனை வந்தே தசரத புத்திரனாகி எனது குருவாகிய (கு = அஞானத்தை ரு = அழிக்கின்ற வன்) ஸ்ரீராகவனை எப்பொழுதும் வந்திக்கிறேன்.

वन्दे शौनकगौतमाद्यभिनुतं वन्दे घनश्यामलं
वन्दे तारकपीठमध्यनिलयं वन्दे जगन्नायकम् ।
वन्दे भक्तजनौघदेवविटपं वन्दे धनुर्वल्लभं
वन्दे तत्त्वमसीतिवाक्यजनकं वन्दे सदा राघवम् ।। *(134)*

வந்தே ஸௌனக கௌதமாத்யபிநுதம் வந்தே கணஸ்யாமலம்
வந்தே தாரகபீடமத்யநிலயம் வந்தே ஜகன்னாயகம்।
வந்தே பக்தஜனௌக தேவவிடபம் வந்தே தனுர்வல்லபம்
வந்தே தத்வமஸீதிவாக்ய ஜனகம் வந்தே ஸதா ராகவம்॥

சௌனகர் கௌதமர் முதலியவர்களால் ஸ்துதிக்கப் பட்டவனும், மேகச்யாமளனும், தாரகமென்னும் ஓங்காரமாகிய பீடத்தின் மத்தியில் இருப்பவனும் ஜகன்னாயகனுமாயிருப்பவனை வந்திக்கின்றேன். பக்த ஜனங்களுக்கு கற்பகவிருக்ஷமும் தனுர்வித்தையில் மிகப்பிரியமுடையவனு மாகியவனை வந்தே, "தத்த்வமஸி" முதலிய மகாவாக்யங்களை தன்னுடைய அறிவிக்கு நிமித்தமாக உடைய ராகவனை வந்திக்கிறேன்.

**वन्दे सूर्यशशाङ्कलोचनयुगं वन्दे जगत्पावनं**
**वन्दे पत्रहस्रपद्मनिलयं वन्दे पुरारिप्रियम् ।**
**वन्दे राक्षसवंशनाशनकरं वन्दे सुधाशीतलं**
**वन्दे देवकपीन्द्रकोटिविनुतं वन्दे सदा राघवम् ।।** ***(135)***

***வந்தே ஸூர்யஸஸாங்கலோசனயுகம் வந்தே ஜகத்பாவனம்***
***வந்தே பத்ரஸஹஸ்ர பத்மநிலயம் வந்தே புராரிப்ரியம்।***
***வந்தே ராக்ஷஸவம்ஸநாஸனகரம் வந்தே ஸுதாஸீதலம்***
***வந்தே தேகர்பீத்ரகோடிவினுதம் வந்தே ஸதா ராகவம்।।***

சூரிய சந்திரர்களைக் கண்களாக உடையவனை வந்தே, உலகத்தைப் பரிசுத்தமாக்குகின்றவனை வந்தே, ஆயிரமிதழ் தாமரைப்பூவில் (பிரம்ம ரந்திரத்திலுள்ள ஸகஸ்ரதள கமலத்தில்) இருப்பவனை வந்தே, த்ரிபுரர்களையழித்த பரமசிவனுக்கு மிகப் பிரியனாகியவனை வந்தே, ராக்ஷஸர் வம்சத்தை நாசம் செய்தவனை வந்தே, அமிர்தம் போல் குளிர்ந்தவனை வந்தே, தேவர்களாலும் வானரர்களாலும் துதிக்கப் பட்டவனை வந்தே, இராகவராமனை எப்பொழுதும் வணங்குகிறேன்.

वन्दे सागरगर्वभङ्गविशिखं वन्दे जगज्जीवनं
वन्दे कौशिकयागरक्षणकरं वन्दे गुरुणां गुरुम् ।
वन्दे बाणशरासनोज्ज्वलकरं वन्दे जटावल्कलं
वन्दे लक्ष्मणभूमिजान्वितमहं वन्दे सदा राघवम् ।। *(136)*

வந்தே ஸாகரகர்வபங்கவிஸகம் வந்தே ஜகஜ்ஜீவனம்
வந்தே கௌஸிகயாகரக்ஷணகரம் வந்தே குருணாம் குரும்।
வந்தே பாணஸராஸனோஜ்ஜ்வலகரம் வந்தே ஜடாவல்கலம்
வந்தே லக்ஷ்மணபூமி ஜான்விதமஹம் வந்தே ஸதா ராகவம்॥

ஸமுத்ரத்தின் கர்வபங்கம் செய்யக்கூடிய பாணங்களுடைய இராமனை வந்திக்கின்றேன். ஜகத்துக்கு ப்ராணனைக் கொடுப்பவனை வந்தே, விச்வாமித்ரரிஷியின் யாகரக்ஷணை செய்தவனை வந்தே, குருநாதாளுக்கும் குருவாகியவனை வந்தே, அம்பு வில்லேந்திய கரமுடையவனை வந்தே, ஜடா மரவுரிகளணிந்தவனை வந்தே, சீதா லக்ஷ்மணருடன் கூடிய ஸ்ரீராகவனை ஸதா வந்திக்கிறேன்.

वन्दे पाण्डरपुण्डरीकनयनं वन्देऽब्जबिंबाननं
वन्दे कंबुगळं कराब्जयुगळं वन्दे ललाटोज्ज्वलम् ।
वन्दे पीतदुकूलमंबुदनिभं वन्दे जगन्मोहनं
वन्दे कारणमानुषोज्ज्वलतनुं वन्दे सदा राघवम् ।। *(137)*

வந்தே பாண்டரபுண்டரீகநயனம் வந்தே அப்ஜபிம்பானனம்
வந்தே கம்புகளம் கராப்ஜயுகளம் வந்தே
லலாடோஜ்ஜ்வலம்।
வந்தே பீதகுலமம்புதநிபம் வந்தே ஜகன் மோஹனம்
வந்தே காரணமானுஷோஜ்ஜ்வலதனும் வந்தே ஸதா
ராகவம்॥

வெண்தாமரை போன்ற கண்களுடையவனை வந்தே, சந்திர பிம்பம் போன்ற முகமுடையவனை வந்தே, சங்கு போன்ற கழுத்தையுடையவனும் தாமரைப்பூ போன்ற இருகரங்களுடைய வனுமாகிய வனை வந்தே, பீதாம்பரமுடையவனும், கார்மேக வர்ணனுமாகியவனை வந்திக்கிறேன். ஜகன் மோஹ கரனை வந்தே, ஜகத் ஸம்ரக்ஷணை செய்யும் காரணத்தால் மாயா மானுட வேஷம் பூண்ட ராகவனை ஸதா வந்திக்கிறேன்.

**वन्दे नीलसरोजकोमलरुचिं वन्दे जगद्वन्दितं**
**वन्दे सूर्यकुलाब्धिकौस्तुभमणिं वन्दे सुराराधितम्।**
**वन्दे पातकपञ्चकप्रहरणं वन्दे जगत्कारणं**
**वन्दे विंशपिपञ्चतत्त्वरहितं वन्दे सदा राघवम्।।** *(138)*

***வந்தே நீலஸரோஜ கோமலருசிம் வந்தே ஜகத்வன்திதம்***
***வந்தே ஸூர்யகுலாப்தி கௌஸ்துபமணிம் வந்தே ஸுராராதிதம்।***
***வந்தே பாதகபஞ்சகப்ரஹரணம் வந்தே ஜகத்காரணம்***
***வந்தே விம்ஸதிபஞ்சதத்வரஹிதம் வந்தே ஸதா ராகவம்।।***

நீலநிறமான அல்லிப்பூப்போல் கோமளமாகிய காந்தியுடைய வனை வந்தே, ஸகல உலகங்களாலும் வந்திக்கப்பட்டவனை வந்தே, சூரிய வம்சமாகிய ஸமுத்திரத்திலுதித்த கௌஸ்துபமணி யாயிருப்பவனை வந்தே, ஜகத்காரணனாகியவனை வந்தே, இருபத் தைந்து தத்துவங்களுக்கதீதமான ஸ்ரீராகவனை ஸதா வந்திக்கிறேன்.

वन्दे साधकवर्गकल्पकतरुं वन्दे त्रिमूर्त्यात्मकं
वन्दे नादलयान्तरस्थलगतं वन्दे त्रिवर्गात्मकम् ।
वन्दे रागविहीनचित्तसुलभं वन्दे सभानायकं
वन्दे पूर्णदयामृतार्णवमहं वन्दे सदा राघवम् ।। (139)

வந்தே ஸாதகவர்க கல்பகதரும் வந்தே த்ரிமூர்த்யாத்மகம்
வந்தே நாதலயான்தரஸ்தலகதம் வந்தே த்ரிவர்காத்மகம்।
வந்தே ராகவிஹீனசித்தஸுலபம் வந்தே ஸபாநாயகம்
வந்தே பூர்ண தயாம்ருதார்ணவமஹம் வந்தே ஸதா ராகவம்।।

பக்தவர்கங்களுக்கு கற்பக விருக்ஷம் போன்றவனை வந்தே, திருமூர்த்திரூபியாகியவனை வந்தே, நாதம் லயிக்கக்கூடிய சூக்ஷ்ம ஸ்தானத்தில் பிரகாசிக்கின்றவனை வந்தே, தர்மம் - அர்தம் - காமமென்னும் த்ரிவர்கரூபியாகியவனை வந்தே, ராகத்வேஷங்களில்லாத மனமுடையோருக்கு சுலபனாகிய வனை வந்தே, சித்ஸபாபதியாகியவனை வந்திக்கிறேன், நிறைந்த கருணைக்கடலாகியவனை வந்திக்கிறேன், ஸ்ரீராகவனை ஸதா வந்திக்கிறேன்.

वन्दे सात्त्विकतत्त्वमुद्रिततनुं वन्दे सुधादायकं
वन्दे चारुचतुर्भुजं मणिनिभं वन्दे षडब्जस्थितम् ।
वन्दे ब्रह्मपिपीलिकादिनिलयं वन्दे विराड्विग्रहं
वन्दे पन्नगतल्पशायिनमहं वन्दे सता राघवम् ।। (140)

வந்தே ஸாத்விக தத்வமுத்ரிததனும் வந்தே ஸுதாதாயகம்
வந்தே சாருசதுர்புஜம் மணினிபம் வந்தே ஷடப்ஜஸ்திதம்।
வந்தே ப்ரஹ்மபிபீலிகாதிநிலயம் வந்தே விராட்விக்ரஹம்
வந்தே பன்னகதல்பஸாயினமஹம் வந்தே ஸதா ராகவம்।।

ஸாத்வீகமான பஞ்சபூத தத்வங்களால் நிறைந்த தேகமுடையவனை வந்திக்கிறேன், மோக்ஷமென்னும் அமிர்தமளிப்பவனை வந்தே, அழகான நான்கு கைகளுடையவனை வணங்குகிறேன். இந்திர நீலமணி போன்றவனை வந்தே, மூலாதாரம் - ஸ்வாதிஷ்டானம் - மணிபூரம் - அனாகதம் - விசுத்தி - ஆச்ஞை - என்னும் ஷடாதார சக்ரங்களில் ஸ்திதி செய்கின்றவனை வந்திக்கிறேன், சதுர்முக ப்ரம்மா முதல் எறும்பு வரையிலுமுள்ள ஸகல பிராணிகளிலும் அந்தர்யாமியாக இருக்கின்றவனை வந்தே, விராட் ரூபியாகியவனை வந்திக்கிறேன் (பாம்புப்படுக்கை) சேஷசாயியாகிய ராகவனை வந்திக்கிறேன்.

**सिंहासनस्थं मुनिसिद्धसेव्यं रक्तोत्पलालङ्कृतपादपद्मम् ।**
**सीतासमेतं शशिसूर्यनेत्रं रामं भजे राघवरामचन्द्रम् ।।** ***(141)***

***ஸிம்ஹாஸனஸ்தம் முனிஸித்தஸேவ்யம்***
***ஸக்தோத்பலாலங்க்ருத பாத பத்மம்।***
***ஸீதாஸ மேதம் ஸஸிஸூர்ய நேத்ரம்***
***ராமம் பஜே ராகவராமசந்த்ரம்॥***

ஸிம்ஹாஸனத்திலிருப்பவனும், முனிகளாலும் சித்தர்களாலும் ஸேவிக்கத் தகுந்தவனும், செந்தாமரை போல அலங்காரமுடைய பாதமுடையவனும், ஸீதையுடன் கூடி சூரிய சந்திரர்களை கண்ணாக உடையவனும், ராகவன் - ராமசந்திரன் என்ற பெயர்களுடையவனுமாகிய ராமனை பஜிக்கின்றேன்.

**श्रीरामभद्राश्रितसद्गुरूणां पादारविन्दं भजतां नराणाम् ।**
**आरोग्य मैश्वर्य मनन्तकीर्ति रन्ते च विष्णोः पद मस्ति सत्यम् ।।** ***(142)***

***ஸ்ரீராமபத்ராஸ்ரிதஸத்குரூணாம் பாதாரவிந்தம் பஜதாம் நராணாம்।***
***ஆரோக்ய மைஸ்வர்ய மனந்தகீர்த்தி ரந்தே ச விஷ்ணோ: பத மஸ்தி ஸத்யம்॥***

ஸ்ரீராமசந்த்ரனை பஜிக்கின்ற ஸத்குருநாதாளை பக்தியுடன் ஸேவிக்கின்ற மனிதர்களுக்கு ஜீவித்திருக்கும் வேளையில் ஆரோக்யமும், ஐச்வர்யமும், ஏராளமான கீர்த்தியும், தேஹமிழந்த பிறகு பரமாத்மாவாகிய ஸ்ரீமன் நாராயணனின் பரமபதமும் கிடைப்பதுண்மையானது.

**दशरथवरपुत्रं जानकीसत्कळत्रं दशमुखहरदक्षं पद्मपत्रायताक्षम् ।**

**करधृतशरचापं चारुमुक्ताकलापं रघुकुलनृवरेण्यं राम मीडे शरण्यम् ।।**

***தஸரதவரபுத்ரம் ஜானகீ ஸத்களத்ரம்***

***தஸமுகஹரதக்ஷம் பத்மபத்ராயதாக்ஷம்।***

***கரத்ருதஸரசாபம் ச்சாருமுக்தாகலாபம்***

***ரகுகுலன்ருவரேண்யம் ராம மீடே ஸரண்யம்।।***

தசரதனின் பிரிய புத்ரனாயும், ஜானகீபதியாயும், ராவணனை ஸம்கரிப்பதில் ஸமர்தனாயும், தாமரையிதழ் போல நீண்ட கண்களுடையவனாயும், கையில் அம்பு வில்லேந்தியவனும், அழகான முத்துமாலை தரித்தவனாயும், ரகுகுலத்துப் பிறந்தவரில் சிரேஷ்ட னாயும் ரஷகனாயுமிருக்கின்ற ஸ்ரீராமனை நான் ஸ்துதிக்கின்றேன்.

**दशमुखगजसिंहं दैत्यगर्वातिरंहं**

**कदनभयदहस्तं तारकब्रह्म शस्तम् ।**

**मणिखचितकिरीटं मञ्जुलालापवाटं**

**दशरथकुलचन्द्रं रामचन्द्रं भजेऽहम् ।।** ***(144)***

***தஸமுககஜஸிம்ஹம் தைத்யகர்வாதிரம்ஹம்***

***கதனபயதஹஸ்தம் தாரகப்ரஹ்ம ஸஸ்தம்।***

***மணிகசிதகிரீடம் மஞ்ஜுலாலாபவாடம்***

***தஸரதகுலசந்த்ரம் ராமசந்த்ரம் பஜே அஹம்।।***

பத்துத்தலைப்பூச்சியாகிய கஜத்தை சிங்கம் போலழிந் தவனும், அரக்கர்களின் கர்வத்தைப் போக்குகின்றவனும், உலகத்தை உபத்ரவிக்கின்றவர் களுக்குப் பயமளிக்கும் கைகளுடையவனும், மிக ப்ரசஸ்தமான தாரகப்ரம்ம (ஓங்காரத்திலறிய வேண்டும் பிரம்ம) ரூபனும், மணிமயக்கிரீட முடையவனும், மதுரமான வார்த்தைகள் பேசுகிறவனும், தசரதனின் குலத்துக்கு சந்திரன்போல் சந்தோஷமளிப்பவனு மாகிய ஸ்ரீராமசந்திரனை யான் பஜிக்கிறேன்.

रामं रक्तसरोरुहाक्ष ममलं लङ्काधिनाथान्तकं
कौसल्यानयनोत्सुकं रघुवरं नागेन्द्रतल्पस्थितम् ।
वैदेहीकुचकुम्भकुङ्कुमरजोलङ्कारहारं हरिं
मायामानुषविग्रहं रघुपतिं सीतासमेतं भजे ।। (145)

*ராமம் ரக்தஸரோருஹாக்ஷ மமலம் லங்காதிநாதான்தகம்*
*கௌஸல்யாநயனோத்ஸுகம் ரகுவரம்*
*நாகேந்த்ரதல்பஸ்திதம்।*
*வைதேஹீ குசகும்ப குங்குமரஜோ அலங்காரஹாரம் ஹரிம்*
*மாயாமானுஷ விக்ரஹம் ரகுபதிம் ஸீதாஸமேதம் பஜே॥*

செந்தாமரைக் கண்ணனும், நிர்மலஸ்வரூபனும் (காமக்ரோதாதி மலமற்றவன், மாயாமலஹீனன்) லங்காதிபதிக்க நாசனும், கௌஸல்யையின் கண்களுக்கு ஆனந்தமளிப்பவனும், ரகுச்ரேஷ்டனும், ஆதிசேஷப் பாம்புப்படுக்கையில் படுத்தவனும், வைதேஹியின் ஸ்தனங்களிலிருக்கும் அலங்காரமான குங்குமாஸத்தையழிப்பவனும், ஸ்ரீஹரிரூபி யாயும், மாயாமானிட வேடம் பூண்டவனும் ஸீதா ஸமேதனுமாகிய ஸ்ரீராமனை பஜிக்கிறேன்.

रामं राक्षसमर्दनं रघुवरं दैतेयबिध्वंसिनं
सुग्रीवेप्सितराज्यदं सुरपते र्भीत्यन्तकं शार्ङ्गिणम्।
भक्ताना मभयप्रदं भयहरं पापौघविध्वंसिनं
सामीरिस्तुतपादपद्मयुगळं सीतासमेतं भजे।। (145)

*ராமம் ராக்ஷஸமர்தனம் ரகுவரம் தைதேயபித்வம்ஸினம்*
*ஸுக்ரீவேப்ஸிதராஜ்யதம் ஸுரபதேர் பீத்யன்தகம் ஸார்ங்கிணம்।*
*பக்தானா மபயப்ரதம் பயஹரம் பாபௌகவித்வம்ஸினம்*
*ஸாமீரிஸ்துதபாதபத்மயுகளம் ஸீதாஸமேதம் பஜே।।*

ராக்ஷஸர்களை மர்தனம் செய்கிறவனும், ரகுச்ரேஷ்டனும், அஸுரர்களை த்வம்சம் செய்கிறவனும், சுக்ரீவனுக்கிஷ்டமான ராஜ்யத்தையளித்தவனும், தேவேந்திரனின் பயத்தைப் போக்கினவனும், சார்ங்கமென்னும் தனுஸ்ஸைத் தரித்தவனும், பக்தர்களுக்கு அபயத்தைக் கொடுப்பவனும் அவர்கள் பயத்தை அழிப்பவனும், வாயு குமாரனாகிய ஹநுமானால் ஸ்துதிக்கப்பட்ட பாத பத்மமுடையவனும், ஸீதாஸமேதனுமாகிய ஸ்ரீராமனைப் பஜிக்கிறேன்.

यत्पादाम्बुजरेणुना मुनिसती मुक्तिंगता यन्महः
पुण्यं पातकनाशनं त्रिजगतां भाति स्मृतं पावनम्।
स्मृत्वा राघव मप्रमेय ममलं पूर्णेन्दुमन्दस्मितं
तं रामं सरसीरुहाक्ष ममलं सीतासमेदं भजे।। (147)

*யத்பாதாம்புஜ ரேணுனா முனிஸதீ முக்திம்கதா யன்மஹ:*
*புண்யம் பாதகநாஸனம் த்ரிஜகதாம் பாதி ஸ்ம்ருதம் பாவனம்।*
*ஸ்ம்ருத்வா ராகவ மப்ரமேய மமலம் பூர்ணேந்துமந்தஸ்மிதம்*
*தம் ராமம் வரஸீருஹாக்ஷ மமலம் ஸீதாஸமேதம் பஜே।।*

எந்த ஸ்ரீராமனின் பாத தூளியினால் முனிபத்னி யாகிய அகல்யை முக்தியடைந்தாளோ, யாதொரு தேஜஸ்ஸானது புண்யமாயும் பாபத்தையழிப்பதாயும் முவ்வுலகத்தையும் சுத்தி செய்வதாயும் விளங்குகிறதோ அந்த மனோவாக்குக்களுக்கு புலப்படாத நிர்மலமான பூர்ணசந்திரன் போன்ற மந்தஹாஸ முடைய ராகவனை நினைத்துக்கொண்டு தாமரைக்கண்ணனாய் ஸீதா ஸமேதனாகிய நிர்மலனாகிய அந்த ஸ்ரீராமனைப் பஜிக்கிறேன்.

वैदेहीकुचमण्डलाग्रविलसन्माणिक्यहस्ताम्बुजं
चञ्चत्कङ्कणहारनूपुरलसत्केयूरहारान्वितम् ।
दिव्यश्रीमणिकुण्डलोज्ज्वलमहाभूषासहसान्वितं
वीरश्रीरघुपुङ्गवं गुणनिधिं सीतासमेतं भजे ।। *(147)*

*வைதேஹீகுச மண்டலாக்ர விலஸன்*
*மாணிக்யஹஸ்தாம்புஜம்*
*சஞ்சத்கங்கணஹாரனூபுர லஸத்கேயூர ஹாரான்விதம்।*
*திவ்ய ஸ்ரீமணிகுண்டலோஜ்ஜ்வலமஹாபூஷா*
*ஸஹஸ்ரான்விதம்*
*வீரஸ்ரீரகுபுங்கவம் குணநிதிம் ஸீதா ஸமேதம் பஜே॥*

சீதாதேவியின் ஸ்தனமண்டலத்தின்மேல் மாணிக்யம் போல் சோபிக்கும் கைகளுடையவனும், அசைகின்ற கங்கணங்கள், அழகான தோள்வளைகள் சோபிக்கின்ற முத்துமாலைகள் இவைகளுடன் கூடினவனும், திவ்யமான மணிகுண்டலங்கள், இன்னும் ஜ்வலிக்கின்ற வேலையுள்ள அனேக ஆபரணங்களை அணிந்தவனும், மஹாவீரனாகிய ரகுசிரேஷ்டனும், ஸகல குணநிதியும், ஸீதா தேவீ ஸமேதனுமாகிய ஸ்ரீராமனை நான் பஜிக்கின்றேன்.

वैदेहीकुचमण्डलोपरिलसन्माणिक्यहारावळी-
मध्यस्थं नवनीतकोमलरुचिं नीलोत्पलश्यामलम्।
कन्दर्पायुतकोटिसुन्दरतनुं पूर्णेन्दुबिम्बाननं
कौसल्याकुलभूषणं रघुपतिं सीतासमेतं भजे।। (149)

வைதேஹீகுசமண்டலோபரிலஸன்மாணிக்யஹாராவளீ-
மத்யஸ்தம் நவனீதகோமலருசிம் நீலோத்பலஸ்யாமலம்।
கந்தர்பாயுத கோடிஸுந்தரதனும் பூர்ணேந்துபிம்பானனம்
கௌஸல்யா குலபூஷணம் ரகுபதிம் ஸீதாஸமேதம் பஜே॥

ஸீதா தேவியின் குசமண்டலங்களில் விளங்குகின்ற முத்துமாலைக்கு மத்தியமணி போன்றவனும் (நவநீதம்) வெண்ணை போல் கோமளமான தேஹகாந்தியுடையவனும், நீலநிறமான உத்பவம் (அல்லிப்பூ) போல் சியாமள வர்ணனும், கோடிகோடி மன்மதர்கள் போல் சுந்தரமான தேகமுடையவனும், பூர்ணசந்திரன் போன்ற முகமுடையவனும், கௌஸல்யையின் வம்ஸத்திற்கு அலங்கார பூஷணனும், ஸீதாபதியுமாகிய ஸ்ரீராமனை பஜிக்கிறேன்.

दिव्यारण्ययतीन्द्रनामनगरे मध्ये सहामण्टपे
स्वर्णस्तम्भसहस्रषोडशयुते मन्दारमूलाश्रिते।
नानारत्नविचित्रनिर्मलमहासिंहासने संस्थितं
सीतालक्ष्मणसेवितं रघुपतिं सीतासमेतं भजे। (150)

திவ்யாரண்ய யதீந்த்ரநாமநகரே மத்யே மஹாமண்டபே
ஸ்வர்ணஸ்தம்பஸஹஸ்ரஷோடஸயுதே
மந்தாரமூலாஸ்ரிதே।
நாநா ரத்னவிசித்ர நிர்மல மஹாஸிம்ஹாஸனே ஸம்ஸ்திதம்
ஸீதாலக்ஷ்மண ஸேவிதம் ரகுபதிம் ஸீதாஸமேதம் பஜே॥

திவ்யமான ஆரண்யமென்னும் நகரத்தில் மந்தார விருக்ஷமூலத்திலிருக்கும் பதினாறாயிரம் ஸ்தம்பங்களுடன் கூடிய மஹாமண்டபத்தின் மத்தியில் நானாவித ரத்னங்களால் விசித்ரமான ஸிம்ஹாஸனத்தில் இருக்கும், ஸீதை லக்ஷ்மணனிவர்களுடன் கூடின ஸீதாராமனை பஜிக்கிறேன்.

कस्तूरीतिलकं कपीन्द्रहरणं कारुण्यवारांनिधिं
क्षीराम्भोधिसुतामुखाब्जमधुपं कल्याणसंपन्निधिम् ।
कौसल्यानयनोत्सुकं कपिवरत्राणं महापौरुषं
कौमारप्रिय मर्ककोटिसदृशं सीतासमेतं भजे ।। *(151)*

*கஸ்தூரீதிலகம் கபீந்த்ரஹரணம் காருண்யவாராம் நிதிம்*
*க்ஷீராம்போதி ஸுதாமுகாப்ஜமதுபம் கல்யாண ஸம்பன்னிதிம்।*
*கௌஸல்யாநயனோத்ஸுகம் கபிவரத்ராணம் மஹாபௌருஷம்*
*கௌமாரப்ரிய மர்ககோடிஸத்ருஸம் ஸீதாஸமேதம் பஜே॥*

கஸ்தூரிப் பொட்டுடையவனும், வானர ராஜனாகிய வாலியை அழித்தவனும், க்ஷீரஸமுத்திரத்தின் பெண்ணாகிய மஹாலக்ஷ்மியாகிய ஸீதாதேவியின் முககமலத்திலிருக்கும் வண்டுபோன்றவனும், கருணைக்கடலும், கல்யாண ஸம்பத்துக்கு இருப்பிடமும், கௌஸல்யையின் கண்களுக்கு குளிர்ச்சி செய்கிறவனும், வானரசிரேஷ்டனாகிய சுக்ரீவனை ரக்ஷித்தவனும், மஹாபுருஷனும், பாலலீலைகளில் மிகப்பிரியமுடையவனும், கோடி சூரியர்களுக்கு சமானனுமாகிய ஸ்ரீஸீதாராமனை நான் வணங்குகிறேன்.

विद्युत्कोटिदिवाकरद्युनिभंश्रीकौस्तुभालङ्कृतं
योगीन्द्रैस्सनकादिभिः परिवृतं कैलासनाथप्रियम्।
मुक्तारत्नकिरीटकुण्डलधरं ग्रैवेयहारान्वितं
वैदेहीकुचसन्निवासमनिशं सीतासमेतं भजे।। (152)

வித்யுத்கோடி திவாகரத் யுதினிபம்
ஶ்ரீகௌஸ்துபாலங்க்ருதம்
யோகீந்த்ரைஸ்ஸனகாதிபி: பரிவ்ருதம் கைலாஸநாதப்ரியம்।
முக்தாரத்ன கிரீடகுண்டலதரம் க்ரைவேயஹாரான்விதம்
வைதேஹீகுச ஸந்நிவாஸமனிஸம் ஸீதாஸமேதம் பஜே॥

கோடிமின்னல் கொடிக்கும் கோடி சூரியர்களுக்கு ஸமானனுமாகியவனும், கௌஸ்துப ரத்னத்தால் அலங்கரித் தவனும், ஸனகாதி யோகிகளால் சூழப்பட்டவனும், கைலாஸபதி யாகிய பரமேச்வரனுக்கு மிகப்பிரியனும், முத்துரத்னங்க ளிழைத்த கிரீடம்-குண்டலங்கள் தரித்தவனும், கண்டாபரணம் - முத்து மாலைகள் பூண்டவனும், வைதேஹியை ஆலிங்கனம் செய்திருப்பவனுமாகிய ஸீதாராமனை பஜிக்கிறேன்.

मेघश्यामल मम्बुजातनयनं विस्तीर्णवक्षस्स्थलं
बाहुद्वन्द्वविराजितं सुवदनं शोणाङ्घ्रिपङ्केरुहम्।
नानारत्नविचित्रभूषणयुतं कोदण्डबाणाङ्कितं
त्रैलोक्याऽप्रतिमानसुन्दरतनुं सीतासमेतं भजे।। (153)

மேகஸ்யாமல மம்புஜாதநயனம் விஸ்தீர்ணவக்ஷஸ்தலம்
பாஹுத்வந்த்வ விராஜிதம் ஸுவதனம்
ஸோணாங்க்ரிபங்கேருஹம்।
நானாரத்னவிசித்ரபூஷணயுதம் கோதண்டபாணாங்கிதம்
த்ரைலோக்யா அப்ரதிமானஸுந்தரதனும்
ஸீதாஸமேதம் பஜே॥

மேகசியாமள வர்ணனும், தாமரைக்கண்ணனும், விசாலமான மார்புடையவனும், தீர்க்கமான இரண்டு கைகளுடையவனும், மனோஹரமான முகமுடைய வனும், சிகப்பான பாதகமல முடையவனும், நாநா ரத்னங்களால் செய்த ஆபரணங்களால் அலங்கரித்த வனும், கோதண்டதனுஸ்பாணங்களைக் கையில் தரித்தவனும், முவ்வுலகங்களிலும் ஒப்பற்ற மிகச் சுந்தரமான வடிவுடையவனும் ஆகிய ஸீதாராமனை பஜிக்கிறேன்.

वैदेहीयुतवामभाग मतुलं वन्दारुमन्दारकं
वन्दे प्रस्तुतकीर्तिवासिततरुच्छायानुकारिप्रभम् ।
वैदेहीकुचकुङ्कुमाङ्कितमहोरस्कं महाभूपणं
वेदान्तैरुपगीयमानमसकृत्सीतासमेतं भजे ।। *(154)*

***வைதேஹீயுதவாமபாக மதுலம் வந்தாருமந்தா***
***வந்தே ப்ரஸ்துதகீர்த்திவாஸித தருச்ச்சாயானுகாரிப்ரபம்।***
***வைதேஹீகுசகுங்குமாங்கிதமஹோஸ்கம் மஹாபூஷணம்***
***வேதாந்தைருபகீயமான மஸக்ருத் ஸீதாஸமேதம் பஜே॥***

சீதாதேவியை இடது பக்கமுடைத்தவனும், வணங்கிய பக்தர்களுக்கு ஒப்பற்ற மந்தாரமென்னும் கல்பவிருக்ஷமும், எல்லோராலும் புகழப்பட்ட கீர்த்தியால் சோபித்துக் கொண்டிருக்கும் கல்பக விருஷ நிழல்போல் கருத்த மேனியுடையவனும் ஆகியவனை வணங்குகிறேன். மற்றும் ஸீதாதேவியின் குசகுங்குமத் தையுடைய விசாலமான வக்ஷஸ்தலமுடையவனும், மஹத்தான ஆபரணமுடையவனும், உபநிஷத்துக் களால் துதிக்கப்பட்டவனும் ஆகிய ஸ்ரீஸீதா ராமனை எப்பொழுதும் அடிக்கடி வணங்கி பஜிக்கிறேன்.

देवानां हितकारणेन भुवने धृत्वाऽवतारं ध्रुवं
रामं कौशिकयज्ञविघ्नदळनं तत्ताटकासंहरम् ।
नित्यं गौतमपत्निशापदळनश्रीपादरेणुं शुभं
शम्भोरुत्कटचापखण्डनमहासत्वं भजे राघवम् ।। (155)

தேவானாம் ஹிதகாரணேன புவனே த்ருத்வா அவதாரத்வம்
ராமம் கௌஸிகயஞவிக்னதளனம் தத்தாடகா ஸம்ஹரம்
நித்யம் கௌதமபத்நிஸாப தளனஶ்ரீபாதரேணும் ஸுபம்
ஸம்போருத்கடசாபகண்டன மஹாஸத்வம் பஜே ராகவம்॥

தேவர்களின் ஹிதத்துக்காகவேண்டி பூமியில் அவதரித்த வனும், பிறப்பு, இறப்பு அற்றவனும் கௌசிக ரிஷியின் யாக விக்னங்களைப் போக்கியவனும், தாடகையை சம்ஹரித்தவனும், நித்யரூபனும், அகலிகையின் சாபத்தைப் போக்கும் பாத தூளியுடையவனும், பரமசிவனுடைய த்ரியம்பக தனுஸ்ஸை முறித்த மஹாபலசாலியும், ஆகிய ராகவனை பஜிக்கின்றேன்.

श्रीरामं नवरत्नकुण्डलधरं श्रीरामरक्षामणिं
श्रीरामं च सहस्रभानुसदृशं श्रीरामचन्द्रोदयम् ।
श्रीरामं श्रुतकीर्तिमाकरमहं श्रीराममुक्तिप्रदं
श्रीरामं रघुनन्दनं भयहरं श्रीरामचन्द्रं भजे । (156)

ஶ்ரீராமம் நவரத்னகுண்டலதரம் ஶ்ரீராமரக்ஷாமணிம்
ஶ்ரீராமம் ச ஸஹஸ்ரபானுஸத்ருஸம் ஶ்ரீராமசந்த்ரோதயம்।
ஶ்ரீராமம் ஸ்ருதகீர்த்திர்மாகரமஹம் ஶ்ரீராமமுக்திப்ரதம்
ஶ்ரீராமம் ரகுநந்தனம் பயஹரம் ஶ்ரீராமசந்த்ரம் பஜே॥

நவரத்னமய குண்டலமணிந்தவனும், ஸ்ரீராமனென்னும் பெயருடைய ரக்ஷகமணியும், அனேக சூரியாளுக்குச்சமனும், சந்த்ரோதயம்போல் ஆனந்தத்தை அளிக்கும் ராமனும், உலகப்பிரசித்தமான கீர்த்தியுடையவனும், பக்தர்களுக்கு நிதியும் முக்தியைக் கொடுக்கும் ராமனும், ரகுபுத்திரனும், ஸகலபயங்களையும் போக்குபவனும், ராமாஷ்டாக்ஷராதி மந்திரமயனுமாகிய ஸ்ரீராமசந்திரனை பஜிக்கிறேன்.

(பக்தியதிசயத்தால் ஒரே ச்லோகத்தில் 8 தடவை ஸ்ரீராமபதத்தைக் கவிப்ரயோகித்திருக்கிரார். இது கவிகள், பக்தர்கள் இவர்களின் வாடிக்கையாதலால் - ராமம் - என்ற பதங்களுக்கு வேறு அர்த்தம் வேண்டியதில்லை. புனருக்தி தோஷமில்லை.)

**राम मिन्दीवरश्यामं राजीवायतलोचनम् ।**
**ज्याघोषनिर्जितारातिं जानकीरमणं भजे ।।** ***(157)***

***ராமம் இந்தீவரஸ்யாமம் ராஜீவாயத லோசனம்।***
***ஜ்யா கோஷநிர்ஜிதாராதிம் ஜானகீ ரமணம் பஜே॥***

கருத்த ஆம்பல் போன்ற நிறமுடையவனும், தாமரைப்பூ போல் நீண்ட கண்ணுடையவனும், வில்லில் கட்டியுள்ள ஞாண்கயிற்றின் டங்கார கோஷத்தாலேயே எல்லா சத்துருக்களையும் ஜயிப்பவனுமாகிய ஸீதாபதியை பஜிக்கிறேன்.

**दीर्घबाहु मरविन्दलोचनं दीनवत्सल मनाथरक्षकम् ।**
**दीक्षितं सकललोकरक्षणे दैवतं दशरथात्मजं भजे ।।** ***(158)***

***தீர்கபாஹு மரவிந்தலோசனம் தீனவத்ஸல மனாதரக்ஷகம்।***
***தீக்ஷிதம் ஸகல லோகரக்ஷணே தைவதம்***
***தஸரதாத்மஜம் பஜே॥***

நீண்ட கைகளுடைய - தாமரைக்கண்ணனாகிய தீனவத்ஸலனாகி - அனாதரக்ஷகனாகி - ஸகல உலகங்களை ரக்ஷிப்பதில் தீக்ஷாபத்தனாகி - தசரதன் மைந்தனாகிய எனது தெய்வத்தை நான் பஜிக்கிறேன்.

प्रातस्स्मरामि रघुनाथमुखारविन्दं
मन्दस्मितं मधुरभाषि विशालफालम्।
कर्णावलम्बिचलकुण्डलगण्डभागं
कर्णान्तदीर्घनयनं नयनाभिरामम्॥ *(159)*

*ப்ராதஸ்மராமி ரகுநாத முகாரவிந்தம்*
*மந்தஸ்மிதம் மதுரபாஷி விஸால பாலம்।*
*கர்ணாவலம் பிசல குண்டலகண்ட பாகம்*
*கர்ணாந்ததீர்கநயனம் நயனாபிராமம்॥*

மந்தஹாஸத்துடன் கூடியதான, இன்பான பேச்சுடைய, அகன்ற நெற்றியுடைய, காதில் அசையும் குண்டலங்களால் சோபிக்கும் கன்னங்களுடைய, காதுவரையிலும் நீண்ட கண்களையுடைய நயனங்களுக்கு ஆனந்தத்தை தரக்கூடிய ஸ்ரீராமனின் முகாரவிந்தத்தை விடியற்காலையில் ஸ்மரணம் செய்கிறேன்.

प्रात र्भजामि रघुनाथकरारविन्दं रक्षोगणाय भयदं वरदं निजेभ्यः।
यद्राजसंसदि विभिद्य महेशचापं सीताकरग्रहणमङ्गळमाप सद्यः॥ *(160)*

*ப்ராதர்பஜாமி ரகுநாதகராரவிந்தம்*
*ரக்ஷோகணாய பயதம் வரதம் நிஜேப்ய:।*
*யத்ராஜஸம்ஸதி விபித்ய மஹேஸசாபம்*
*ஸீ தாகரக்ரஹணமங்களமாப ஸத்ய:॥*

யாதொரு ஹஸ்தமானது ராக்ஷஸ குலத்துக்கு பயமளிக்கின்றதோ, தனது பக்தர்களுக்கு இஷ்டமான வரங்களையளிக்கின்றதோ, யாதொரு கரமானது ராஜ ஸபையில் பரமேச்வரரின் வில்லை முறித்து ஸீதாதேவியின் பாணிக்ரகண மங்களத்தை யடைந்ததோ, அப்பேர்பட்ட ஸ்ரீராமசந்த்ரனுடைய தாமரைபோல மிருதுவான கரங்களை காலையில் பஜிக்கிறேன்.

**प्रात र्नमामि रघुनाथपदारविन्दं पद्माङ्कुशादिशुभरेखशुभावहं च।**
**योगीन्द्रमानसमधुव्रतसेव्यमानं शापापहं सपदि गौतमधर्मपत्न्याः॥**

*ப்ராதர்நமாமி ரகுநாத பதாரவிந்தம்*
*பத்மாங்குஸாதி ஸுபரேக ஸுபாவ ஹம் ச ।*
*யோகீந்த்ரமான ஸமதுவ்ரத ஸேவ்யமானம்*
*ஸாபாபஹம் ஸபதி கௌதமதர்மபத்ன்யா: ॥*

கமலம் - அங்குசம் முதலிய சக்கிரவர்த்தி சின்ன மாகிய சுப ரேகைகளையுடையதாயும், யோகீச்வரர்கள் மனதாகும் வண்டுகளால் ஸேவிக்கப்படுகிறதாயும், கௌதமர் தர்ம பத்னியாகிய அகலிகைக்கு உடன் சாபத்தை நீக்குவதுமாகிய ஸ்ரீராமனின் பாதார விந்தங்களை காலையில் பஜிக்கிறேன்.

**प्रात र्वदामि वचसा रघुनाथनाम वाग्दोषहारि सकलं कलुषं निहन्तृ।**
**य त्पार्वती स्वपतिना सह भोक्तुकामा प्रीत्या सहस्रहरिनामसमं जजाप॥**

*ப்ராதர்வதாமி வசஸா ரகுநாதநாம*
*வாக்தோஷஹாரி ஸகலம் கலுஷம் நிஹன்த்ரு ।*
*ய த்பார்வதீ ஸ்வபதினா ஸஹ போக்து காமா*
*ப் ரீத்யா ஸஹஸ்ரஹரிநாமஸமம் ஜஜாப॥*

பார்வதி தேவியும் கூட பதியுடன் ஸகல போகங்களையு மடைய வேண்டுமென்ற எண்ண முடையவளாய் விஷ்ணு ஸஹஸ்ரநாமங்களுக்குச் சமானமான யாதொரு ஸ்ரீராமபுண்ய நாமத்தை ப்ரீதியுடன் ஜபித்தாளோ, அப்பேர்க்கொந்த மகிமையுடையதும், ஸகல விதமான தோஷங்களை நீக்குவதும், ஸமஸ்த பாபங்களைப் போக்குவதுமாகிய ஸ்ரீரகுராமனின் பவித்ரநாமத்தை காலையில் வாக்கினால் சொல்லுகிறேன்.

**प्रातः श्रये श्रुतिनुतां रघुनाथमूर्ति**
**नीलांबुदोत्पलसितेतररत्ननीलाम् ।**
**आमुक्तमौक्तिकविशेषविभूषणाढ्यां**
**ध्येयां समस्तमुनिभि र्निजभृत्यमुख्यैः ।।** ***(163)***

*ப்ராத: ஸ்ரயே ஸ்ருதினுதாம் ரகுநாதமூர்திம்*
*நீலாம்பு தோத்பலஸிதேதர ரத்னநீலாம்।*
*ஆமுக்த மௌக்திகவிஸேஷ விபூஷணாட்யாம்*
*த்யேயாம் ஸமஸ்தமுனிபி ர்நிஜப்ருத்ய முக்யை:॥*

நீலத்தாமரைப்பூ - கருத்த அல்லிப்பூ - இந்திர நீலக்கல்லு இதுகள் போல நிறமுடையதாயும், முத்துமாலை முதலிய விசேஷாபரணங்களணிந்திருப்பதும், ஸகல மாமுனிகளாலும் தனது முக்ய பக்தர்களாலும் த்யானம் செய்யக்கூடியதும், வேதத்தில் பிரதிபாதிதமாயுமுள்ள



ஸ்ரீரகுராமனின் திருமேனியைக் காலையில் தியானம் செய்கிறேன்.

**रघुकुलवरनाथो जानकीप्राणनाथः**

**पितृवचनविधाता कीशराज्यप्रदाता ।**

**प्रतिनिशिचरनाशः प्रापातराज्यप्रवेशो**

**विहितभुवनरक्षः पातु पद्मायताक्षः ।।** *(164)*

*ரகுகுலவரநாதோ ஜானகி ப்ராணநாத:*

*பித்ருவசனவிதாதா கீஸராஜ்யப்ரதாதா ।*

*ப்ரதிநிஸிசரநாஸ: ப்ராப்தராஜ்ய ப்ரவேஸோ*

*விஹித புவனரக்ஷ: பாது பத்மாயதாக்ஷ: ।।*

ரகு வம்சத்துக்குடையவனும், ஜானகீப்ராண நாயகனும், பித்ருவாக்ய பரிபாலனம் செய்தவனும், வானர ராஜாவுக்கு ராஜ்யமளித்தவனும், ப்ரதிகூலாளான அரக்கர்களை அழித்தவனும், பிறகு தனது ராஜ்யத்தையடைந்தவனும் ஸகல லோகங்களையும் ரக்ஷிப்பவனும், தாமரையிதழ் போன்ற கண்களுடைய வனுமாகிய ஸ்ரீராமன் நம்மைக் காப்பாற்று வானாக.

**कुवलयदळनीलः पीतवासाः स्मितास्यो**

**विविधरुचिरभूषाभूषितो दिव्यमूर्तिः ।**

**दशरथकुलनाथो जानकीप्राणनाथो**

**निवसतु मम चित्ते सर्वदा रामचन्द्रः ।।** *(165)*

*குவலயதளநீல: பீதவாஸா: ஸ்மிதாஸ்யோ*

*விவிதருசிரபூஷாபூஷிதோ திவ்யமூர்தி: ।*

*தஸரதகுலநாதோ ஜானகிப்ராண நாதோ*

*நிவஸது மம ச்சித்தே ஸர்வதா ராமசந்த்ர: ।।*

நீலத்தாமரைபோல் நிறமுடையவனும், பீதாம்பர தாரியும், மந்தஹாஸமுடையவனும், நாநாவிதமான உத்தமாலங்காரங் களால் அலங்கரித்தவனும், திவ்ய மங்கள விக்ரஹமுடைய வனும், தசரதன் குலத்துக் குடையவனும், ஸீதாபதியும் ஆகிய ஸ்ரீராமசந்த்ரன் எப்பொழுதும் எனது ஹ்ருதயத்தில் வஸிக்கட்டும்.

जयतु जयतु रामो जानकीवाल्लभोऽयं
जयतु जयतु राम श्चन्द्रचूडार्चिताङ्घ्रिः ।
जयतु जयतु वाणीनाथनाथः परात्मा
जयतु जयतु रामोऽनाथनाथः कृपाळुः ।। *(166)*

*ஜயது ஜயது ராமோ ஜானகீவல்லபோஅயம்*
*ஜயது ஜயது ராம ஸ்ச்சந்த்ரசூடார்சிதாங்க்ரி: ।*
*ஜயது ஜயது வாணீநாதநாத: பராத்மா*
*ஜயது ஜயது ராமோ அநாதநாத: க்ருபாளு: ॥*

ஜானகீ வல்லபனாகிய ஸ்ரீராமன் வாழ்க வாழ்க! பரமசிவனால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீராமன் வாழ்க வாழ்க! ப்ரம்மனுக்கும் நாதனாகிய பரமாத்மா வாழ்க வாழ்க! அனாத ரக்ஷகனாகிய தயாளுவான ராமன் வாழ்க வாழ்க!!

वदतु वदतु वाणी रामरामेति नित्यं
जयतु जयतु चित्तं रामपादारविन्दम् ।
नमतु नमतु देहं सन्ततं रामचन्द्रं
न भवतु मम पापं जन्मजन्मान्तरेषु ।। *(167)*

*வதது வதது வாணீ ராமராமேதி நித்யம்*
*ஜபது ஜபது சித்தம் ராமபாதாரவிந்தம் ।*
*நமது நமது தேஹம் ஸன்ததம் ராமசந்த்ரம்*
*ந பவது மம பாபம் ஜன்மஜன்மாந்தரேஷு ॥*

எனது வாக்கானது ஸதா ராமராமா என்று ஜபிக்கட்டும். என் மனமானது ராம பாதாரவிந்தத்தை த்யானிக்கட்டும். உடலானது எப்பொழுதும் ஸ்ரீராமனையே வணங்கட்டும். ஒரு ஜன்மத்திலும் என்னைப் பாபம் அணுகாமலிருக்கட்டும்.

**आनन्दरूपं वरदं प्रसन्नं सिंहेक्षणं सेवकपारिजातम्।**
**नीलोत्पलाङ्गं भुवनैकमित्रं रामं भजे राघवरामचन्द्रम्॥** *(168)*

***ஆனந்தரூபம் வரதம் ப்ரஸன்னம் ஸிம்ஹேக்ஷணம் ஸேவகபாரிஜாதம் ।***
***நீலோத்பலாங்கம் புவனைகமித்ரம் ராமம் பஜே ராகவ ராமசந்த்ரம் ॥***

ஆனந்தரூபமாய், வரதனாய், கருணை புரிந்தவனாய், சிங்கம்போல் கம்பீர பார்வையுடையவனாய், ஸேவகர்களுக்கு கல்ப விருக்ஷம் போன்றவனாய், நீலோத்பல நிற மேனியாய், ஸகல லோக பந்துவாகிய ராகவன் - ராமசந்த்ரன் என்னக்கூடிய ஸ்ரீராமனை பஜிக்கிறேன்.

**लङ्काविरामं रणरङ्गभीमं राजीवनेत्रं रघुवंशमित्रम्।**
**कारुण्यमूर्तिं करुणाप्रपूर्तिं श्रीरामचन्द्रं शरणं प्रपद्ये॥** *(169)*

***லங்காவிராமம் ரணரங்கபீமம் ராஜீவநேத்ரம் ரகுவம்ஸமித்ரம் ।***
***காருண்யமூர்திம் கருணாப்ரபூர்திம் ஸ்ரீராமசந்த்ரம் ஸரணம் ப்ரபத்யே ॥***

லங்காபுரியை அழித்தவனும், யுத்தகலத்தில் மிகப்பயங்கரனும், தாமரைக்கண்ணனும், ரகுவம்சத்தாருக்கு பந்துவும், கருணாமூர்த்தியும், தயை நிறைந்தவனும் ஆகிய ஸ்ரீராமசந்திரனை சரணமடைகிறேன்.

सुग्रीवमित्रं परमं पवित्रं सीताकळत्रं नवहेमसूत्रम्।
कारुण्यपात्रं शतपत्रनेत्रं श्रीरामचन्द्रं शिरसा नमामि।। (170)

*ஸுக்ரீவமித்ரம் பரமம் பவித்ரம் ஸீதாகளத்ரம் நவஹேம ஸூத்ரம் ।*
*காருண்யபாத்ரம் ஸதபத்ரநேத்ரம் ஸ்ரீராமசந்த்ரம் ஸிரஸா நமாமி ॥*

சுக்ரீவனுக்கு பந்துவாயும், பரம பரிசுத்தனாயும், ஸீதாபதியாயும், தங்க நூலிழைத்த புதிய வஸ்திரமுடையவனும் (தங்க ஒட்டியாணமுடையவனும்) கருணாநிதியும், தாமரைக் கண்ணனும் ஆகிய ஸ்ரீராமனை சிரஸினால் வணங்குகிறேன்.

श्रीराघवेति रमणेति रघूद्वहेति रामेति रावणहरेति रमाधवेति।
साकेतनाथसुमुखेति च सुव्रतेति वाणी सदा वदतु राम! हरे! हरेति।।

*ஸ்ரீராகவேதி ரமணேதி ரகூத்வஹேதி*
*ராமேதி ராவணஹரேதி ரமாதவேதி ।*
*ஸாகேத நாதஸுமுகேதி ச ஸுவ்ரதேதி*
*வாணீ ஸதா வதது ராம! ஹரே! ஹரேதி ॥*

ஓ! ஸ்ரீராமா! எனது வாக்கானது ஸ்ரீ ராகவா! என்றும் சந்தோஷப்படுத்துகிறவனே! ஓ! ரகுசிரேஷ்டா! ராமா! ராவணனை ஸம்ஹரித்தவனே! ஓ! லக்ஷ்மீபதியே! ஹே அயோத்யாபதியே! கோமள முகத்தோனே! சுத்தமான வ்ரதங்களுடையவனே! ராமா! ஹரே-ஹரே! என்று ஸதா உன் திருநாமங்களையே ஜபிக்கட்டும்.

श्रीरामनामामृतमन्त्रबीजं संजीवनं चेन्मनसि प्रतिष्ठम् ।
हालाहलं वा प्रळयानलं वा मृत्यो र्मुखं वा वितथीकरोति ।। *(172)*

***ஸ்ரீராமநாமாம்ருத மந்த்ரபீஜம் ஸம்ஜீவனம் சேன்மனஸி ப்ரதிஷ்டம் ।***
***ஹாலாஹலம் வா ப்ரளயாநலம் வா ம்ருத்யோ ர்முகம் வா விததீகரோதி ॥***

ஸகல உலகங்களையும் பிழைப்பு மூட்டிவைக்கும் ஸ்ரீராமமந்திர பீஜாக்ஷரமாகும் அமிர்தத்தின் விதையானது மனதில் நன்றாய் ஊன்றி நிலைத்து விட்டால் அந்த விதையானது ஹாலாஹல விஷத்தையும், பிரளயகாலாக்னி யையும், யமன் முகத்தையும், இப்பேர்ப்பட்ட எல்லாவற்றையும் உபயோகமற்றதாகச் செய்துவிடுமே.

किं योगशास्त्रैः किमशेषविद्यया किं यागगङ्गादिविशेषतीर्थैः ।
किं ब्रह्मचर्याश्रमसञ्चरेण भक्ति र्नचे त्ते रघुवंशकीर्तयाम् ।। *(173)*

***கிம் யோகஸாஸ்த்ரை: கிமஸேஷவித்யயா***
***கிம் யாககங்காதி விஸேஷதீர்தை: ।***
***கிம் ப்ரஹ்மசர்யாஸ்ரம ஸஞ்சரேண பக்திர்***
***நசே த்தே ரகுவம்ஸ கீர்தயாம் ॥***

ஓ! மனமே! உனக்கு ரகுவம்சத்தின் கீர்த்தியாயுள்ள ஸ்ரீராமச்சந்திரனின் பாதார விந்தங்களில் சிறிதேனும் பக்தியில்லையாகில், நீ எவ்வளவு யோக சாஸ்திரம் படித்து அதை அப்யஸித்தாலென்ன பலன்? மற்று எல்லா வித்தைகளைக் கற்றதாலென்ன பலன்? யாகங்கள் செய்தல், கங்காநதி முதலிய பவித்ர தீர்த்த யாத்ரைகள் செய்வதாலென்ன பலன்? திடப்

பிரம்மசர்யானுஷ்டானம் செய்தாலும் யாது பலன்? எது செய்தாலும் இராமனின் பாதத்தில் பக்தியில்லாவிடில் இதுகளனைத்தும் வியர்த்தமேயின்றிப் பயன்படாது. (பகவத் பக்தியில்லாமல் டம்பாகாரத்துக்காகவும், பலேச்சைகளினாலும் இதுகளைச் செய்யக் கூடாதென்று தாத்பர்யம்).

इदं शरीरं श्लथसन्धिजर्झरं पततयवश्यं परिणामपेशलम्।
किमौषधं पृच्छसि मूढ। दुर्मते। निरामयं रामकथामृतं पिब ॥ *(174)*

*இதம் ஸரீரம் ஸ்லதஸந்திஜர்ஜரம் பதத்யவஸ்யம் பரிணாம*
*பேஸலம் ।*

*கிமௌஷதம் ப்ருச்ச்சஸி மூட! துர்மதே! நிராமயம்*
*ராமகதாம்ருதம் பிப ॥*

ஏ! புத்தியில்லாத மூடமே! பஞ்ச பூதங்களின் விகாரமாய் இவ்வளவுநாள் அழகாயிருந்து கண்ட இந்தச் சரீரமானது, ஸந்தி பந்தங்கள் தளர்ந்து ஜீர்ணமாகிவிட்டதே! இது கட்டாயம் கீழே உன்னிடம் சொல்லாமலே விழுந்துவிடும். இப்பொழுது வந்து ஏன் இதுக்கு மருந்து கேட்கின்றாய், அசடே! ஸகல வியாதிகளையும் போக்கக்கூடிய ராம கதையாகிய அமிர்தத்தையே பானம் செய்வாயாக. (அதனால் திரும்ப இவ்வித சரீரமே உண்டாகாது).

हे रामभद्राश्रय! हे कृपाळो! हे भक्तलोकैकशरण्यमूर्ते!
पुनीहि मां त्वच्चरणारविन्दं जगत्पवित्रं शरणं ममाऽस्तु ॥ *(175)*

*ஹே ராமபத்ராஸ்ரய! ஹே க்ருபாளோ!*

*ஹே பக்தலோகைக ஸரண் ய மூர்த்தே!।*

*புநீஹி மாம் த்வச்சரணா ரவிந்தம்*

*ஜகத்பவித்ரம் ஸரணம் மமாஅஸ்து॥*

ஹே ராமசந்திரா! ஸர்வாச்ரயனே! தயாளுவே! பக்தர்களுக்கு ரக்ஷகனே! என்னை நீ பவித்ரமாகச் செய்வாயாக. உலகத்தில் எல்லாவற்றையும் பரிசுத்த மாக்கக்கூடிய உன் பாதார விந்தமே எனக்கு சரணமாகயிருக்கட்டும்.

**नीलाभ्रदेह! निखिलेश! जगन्निवास! राजीवनेत्र !**
**रमणीयगुणाभिराम!**
**श्रीदाम! दैत्यकुलमर्दन! रामचन्द्र! त्वत्पादपद्म मनिशं**
**कलयामि चित्ते ।।** ***(176)***

***நீலாப்ரதேஹ! நிகிலேஸ! ஜகந்நிவாஸ!***
***ராஜீவநேத்ர! ரமணீய குணாபிராம!।***
***ஸ்ரீதாம! தைத்ய குலமர்தன! ராமசந்த்ர!***
***த்வத்பாதபத்ம மனிஸம் கலயாமி சித்தே।।***

ஓ! கார்மேக மேனியனே! ஸர்வேசனே! ஓ ஜகன்னிவாஸ! தாமரைக்கண்ணா! உத்தமகுண ஸம்பன்னனே - ஸ்ரீ பதியே! அஸுரர்களை மர்தனம் செய்கிறவனே! ராமசந்த்ரா! உன் பாதார விந்தத்தை எப்பொழுதும் மனதில் நினைக்கிறேன்.

**श्री रामचन्द्र। करुणाकर। दीनबन्धो। सीतासमेत। भरताग्रज।**
**राघवेश।**
**पापार्तिभञ्जन भयातुरदीनबन्धो पापाम्बुधौ**
**पतितमुद्धर मा मनाथम्।।** ***(177)***

***ஸ்ரீராமசந்த்ர! கருணாகர! தீநபந்தோ!***
***ஸீதாஸமேத! பரதாக்ரஜ! ராகவே ஸ!।***
***பாபார்திபஞ்ஜன பயாது ரதீனபந்தோ***
***பாபாம்புதௌ பதித முத்தர மா மனாதம்।।***

ஶ்ரீராமசந்த்ரா! கருணைக்கடலே! தீனபந்துவே! ஸீதாபதே! பரதனுக்கண்ணா! ராகவனே! பாப-துக்கங்களையும் போக்கடிப்பவனே! பய பீடிதாளாகிய தீனாளுக்கு பந்துவே! பாபக்கடலில் மூழ்கிய அனாதனாகிய என்னை உத்தரிப்பாயாக.

**इंदीवरदळश्याम मिंदुकोटिनिभाननम् ।**
**कंदर्पकोटिलावण्यं वंदेहं रघुनंदनम् ।।** ***(178)***

***இம்தீவரதளஸ்யாமம் இம்துகோடிநிபானனம்।***
***கம்தர்பகோடிலாவண்யம் வம்தே அஹம் ரகுநம்தனம்।।***

நீலத்தாமரை தளம் போல் சியாமளாங்கனும், கோடி சந்திரனுக்கொப்பான முகமுடையவனும், கோடி மன்மதர்கள்போல் சுந்தரனுமாகிய ஶ்ரீரகுநந்தனனை வணங்குகிறேன்.

**।। श्रीरामकर्णामृतम् समाप्त ।।**

***ஶ்ரீராமகர்ணாம்ருதம் ஸம்பூர்ணம்***

